[30th August 1961

SRI M. KALYANASUNDARAM : In view of the fact that 18th September 1961 has been treated as a non-official day, I have no objection.

DEPUTY SPEAKER : The question is—

' That Rule 23 of the Madras Legislative Assembly Rules be suspended and the House do resolve to transact Government business on **Thursday, 31st August 1961.**'

The motion was put and carried.

### III—GOVERNMENT BILL

THE MADRAS LAND REFORMS (FIXATION OF CEILING ON LAND) BILL, 1960 (L.A. BILL NO. 8 OF 1960) AS AMENDED BY THE JOINT SELECT COMMITTEE—*cont.*

DEPUTY SPEAKER : May I know how long the Hon. Minister will take for his reply?

THE HON. SRI M. A. MANICKAVELU : About an hour.

DEPUTY SPEAKER : May I know how long hon. Members, Sri M. Kalyanasundaram and Sri V. K. Ramaswami Mudaliyar will take for their speeches?

SRI M. KALYANASUNDARAM : I require about 45 minutes.

SRI V. K. RAMASWAMY MUDALIAR : I also require about 45 minutes.

DEPUTY SPEAKER : All right. The hon. Member Sri K. Sattanatha Karayalar may now speak.

**SRI K. SATTANATHA KARAYALAR :** *உதவி சபாநாயகர் அவர்களே, இந்த நிலச் சீர்திருத்த மசோதா நீண்ட நாட்களாக எதிர்பார்த்து, பல ஆண்டுகளாகவே ஒன்றிரண்டு தேர்தல் காலங்களிலேகூட மக்கள் மத்தியில் இதைப்பற்றி மிகவும் பறைசாற்றி ஓட்டு வாங்க உதவிய பிறகு, இப்படி ஒரு மசோதா வரும் வரும் என்று எதிர்பார்த்த பிறகு வந்திருக்கக்கூடிய மசோதா இது. இந்தச் சபையிலே முதன்முதலிலே இந்த மசோதா வந்தபோதிலிருந்து, பிறகு இது பொறுக்குக் கமிட்டிக்குப் போய் திரும்பி வந்த பிறகு எப்படி இருக்கிறது என்று பார்த்தால், இந்த மசோதாவின் உருவே உருக்குலைந்து இருக்கிறது என்பதினாலே எந்தவிதமான பயனும் இருக்க முடியாது என்ற நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது. எதிர்பார்த்த மசோதா ஒன்று. இன்று மக்களின் முன்னால் இந்தச் சபையிலே இருக்கக்கூடிய மசோதா வேறொன்று. இந்த மசோதாவின் முன்னுரையிலே, பிரி-ஆம்பிளிலே, இதன் நோக்கம் என்னவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்று பார்த்தால்,*

' There is great disparity in the ownership of agricultural land leading to the concentration of such land in the hands of certain persons

30th August 1961] [Sri K. Sattanatha Karayalar]

என்று இருக்கிறது. இதோடு மாத்திரம் நிறுத்தி இருந்தால் ஒரு வேளை இந்த மசோதா சட்டமானால் பலன் தரக்கூடும். ஆனால் அப்படி ஒரு மசோதாவையாவது கொண்டுவராமல், இப்படி ஒரு மசோதாவை கொண்டு வந்திருப்பது பெருத்த ஏமாற்றமே. இப்படி ஒரு சட்டம் கொண்டு வராமல், ஒரு காலவரையறையை வரையறுத்து அந்த காலவரையறைக்குப் பிறகு யாரும் 30 ஸ்டாண்டர்டு ஏக்கர்க்கு மேல் வைத்துக் கொள்ளக்கூடாது என்று மாத்திரம் ஒரு சட்டம் செய்துவிட்டால் போதுமானதாக இருக்கும். இதற்கு இந்த உச்ச வரம்பு என்று நிர்ணயிக்க வேண்டிய தேவையே இல்லை. வரையறை மட்டும்தான் இந்தச் சட்டத்தின் நோக்கமாக இருக்க வேண்டுமானால், 64, 65 வரையில் என்று ஒரு காலத்தை வரையறுத்து, அதற்குப் பிறகு நிலத்தில் ஒருவருக்கும் இத்தனை ஏக்கருக்கு மேல் இருக்கக்கூடாது என்று ஒரு சட்டத்தை செய்துவிட்டால்கூட மிகவும் பொருத்தமாகவும், வசதியாகவும் இருக்கும். இப்போது இந்தச் சட்டத்தின் நோக்கமும் கிட்டத்தட்ட நடைமுறையிலே பலன் அதுவாகத்தான் இருக்கிறது. அதற்கு இத்தனைப் பிரசாரம் செய்யத் தேவையில்லை. இத்தனை கஷ்டப்பட்டு பொறுக்குக் கமிட்டிக்கு எல்லாம் அனுப்பி, அதற்குப் பிறகு இப்படி ஒரு சட்டத்தை கொண்டு வரவேண்டிய தேவையோ, அவசியமோ இல்லை. ஆனால் பிளானிங் கமிஷனின் சிபார்சின் அடிப்படையிலே, அதிலே உள்ள பிரிஆம்பிளைப் பார்க்கும்போது, இதிலே இன்னொரு நோக்கம் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

"It is necessary to acquire the agricultural land in excess of the ceiling area and to distribute such land to the landless and other persons among the rural population."

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பிரிவை எடுத்துப் பார்ப்போமேயானால், இந்தச் சட்டம் அதன் அடிப்படையிலே பரிசீலிக்கப்பட்டிருக்கிறதா என்று பார்ப்பது அவசியம். இன்று நிலவுடைமை இல்லாத பாகுபாட்டை ஓரளவு குறைப்பதற்கு பினாமி டிரான்ஸ்சாக்ஷன் எவ்வளவோ நடந்திருக்கிறது, ஓரளவு இதன் விஷயத்திலே பலனளிப்பதாக இருக்கலாம். ஆனால் இது ஒரு பெரிய பிரச்னையாகாது. ஆனாலும் நிலம் இல்லாதவர்களுக்கு, உழுது பயிரிட்டுக் கொண்டிருக்கும் சாகுபடியாளருக்கு அதிக நிலமோ, நலமோ கொடுக்கக்கூடிய வாய்ப்பையும், வசதியையும் இப்போது இந்த மசோதா செய்து கொடுத்திருக்கிறதா என்று பார்த்தால், எதுவும் செய்து கொடுக்கவில்லை என்பதுதான் தெரிய வருகிறது. ஓரளவுக்கு முதலிலே சொன்னபடி, பலருக்கு நிலத்தை பிரித்து எழுதிக் கொடுக்கக்கூடிய நிலையை மாத்திரம் தான் உண்டு பண்ணியிருக்கிறது. இதைத் தவிர, இன்று உண்மையிலேயே சாதாரணமாக, நிலம் இல்லாதவர்களுக்கோ அல்லது நிலத்தை மாத்திரம் நம்பி வாழக்கூடிய மக்களுக்கோ இது எந்த விதப் பயனையும் தரக்கூடியதாக இல்லை. சாகுபடியாளர்கள் பெருமளவில் வாழக்கூடிய சில ஜில்லாக்களிலே பார்த்தால், அங்கு

இந்த நில மசோதா வந்த காரணத்தால் ஒன்று அந்த நிலத்திலே வாழக்கூடியவர்கள் தங்கள் நிலங்களை முழுதும் இழந்துவிட்டு சாதாரண தொழிலாளியாகவோ அல்லது மற்றபடி விவசாயக் கூலியாகவோ, மில் தொழிலாளியாகவோ போகக்கூடிய நிலைமை தான் இன்றைக்கு நடைமுறையிலே நடக்கிறது.

அடுத்தபடியாக, இதிலே என்ன செய்யப்பட்டிருக்கிறது என்று பார்த்தால் "பர்சனல் கல்டிவேஷன்" என்று டெபனிஷன் போட்டிருப்பதால், பல ஆண்டுகளாக உழுது கொண்டிருந்தவர்களை எல்லாம் மாற்றி, புதிய ரீதியிலே அமைக்கக்கூடிய, சொந்த சாகுபடியாளருக்கு உதவக்கூடிய ரீதியிலே தான் இந்தச் சட்டம் செய்யப்பட்டிருக்கிறது. ஒருவன் சென்னையிலே இருந்துகொண்டு, தஞ்சையிலோ அல்லது நெல்லையிலோ சொந்த சாகுபடியாளர் என்ற முறையிலே நிலத்தைப் பயிரிட்டுக் கொண்டு சென்னையிலும் வேலை பார்த்துக் கொண்டிருக்கக்கூடிய ஒரு சூழ்நிலையைத்தான் இது உண்டுபண்ணியிருக்கிறது. நிலத்தையே நம்பிக்கொண்டு இருக்கக்கூடிய விவசாயிகளுக்கு பாதுகாப்பு கொடுக்கக்கூடியதாக இல்லை. ஏற்கனவே இருக்கக்கூடிய சட்டங்களினால் கிடைக்கக் கூடிய நிலங்கள்கூட இந்தச் சட்டத்தினால் பலன் அளிக்காமல் இவர்கள் பாதிக்கப் படுவார்களே தவிர, பாதுகாப்பு கிடைக்காது.

உச்ச வரம்பை எடுத்துக் கொண்டால், 30 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று சொல்லும்போது, இப்போது சாதாரணமாக ஒரு குடும்பம் நடத்த ஆண்டு ஒன்றுக்கு 5,000 ரூபாய் வருமானம் வந்தால் போதும் என்ற நிலைமை இருக்குமானால், நாம் உச்ச வரம்பு அளித்திருப்பதன் மூலம் அந்தக் குடும்பத்தின் வருமான தேவைக்கு 3 பங்கு, 5 பங்கு அதிகமாக வருமானம் வரக்கூடிய நிலைமையைத் தான் உண்டாக்கி இருக்கிறது. ஆகவே இந்த உச்ச வரம்பு நிர்ணயிக்க வேண்டியத் தேவையே இல்லை. இன்னும் இரண்டு தலைமுறைகளுக்கு பிறகு பார்க்கும்போது தானாகவே ஒரு குடும்பத்தில் ஒருவருக்கு நாம் உச்ச வரம்பு நிர்ணயித்துள்ள அளவிலும் குறைவாகவே நிலம் இருப்பதை நாம் பார்க்க முடியும். இதிலே எந்த விதமான சந்தேகமும் இருக்க முடியாது. நாம் சுதந்திர காலத்திலிருந்து "உழுதவனுக்கே நிலம் சொந்தம்" என்று போராடிக் கொண்டு வந்த அடிப்படையிலே இப்போதுள்ள சட்டத்தைப் பார்த்தோமேயானால், இன்றைக்கு இந்த சட்டத்தை அமுலாக்கக் கூடிய தேவையே இல்லை. சென்ற தேர்தலில் இதை ஒரு முக்கியப் பிரச்னையாகக் குறிப்பிடத் தேவையில்லை. ஏனெனில் தேர்தல் கழிந்த பிறகு அப்போது அளித்த உறுதியின் பேரில் இந்தச் சட்டம் வரும் வரும் என்று மிக்க ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்த அடிப்படையிலே பல பாகப் பிரிவினைகள், அதன் அடிப்படையிலே பல பினாமி டிரான்ஸ்சாக்‌ஷன்கள் எல்லாம் நடந்திருக்கின்றன. ஆனால் இப்போது வந்திருக்கக்கூடிய இந்தச் சட்டம் அவைகளை எல்லாம் நடைமுறையிலே அங்கீகரிக்கக்கூடியதாகத்தான் அமைந்திருக்கிறது. ஆகவே இந்தச் சட்டத்தை இப்போது அமுலாக்கப்படுவதை விட 54, 55-ஆம்

ஆண்டுகளிலே இருந்து அமுல் செய்யப்பட்டிருக்கிறது என்று போட்டாலாவது ஒருவித பலனை அளிக்கும் என்று கருதுவதற்கு இடமிருக்கிறது. அப்படியும் செய்யாவிட்டால் இதிலே எந்தவித பலனும் ஏற்படாது.

அடுத்து, விதிவிலக்கு கொடுத்திருப்பதைப் பற்றி எடுத்துக் கொண்டால், தென்னந்தோப்பு, கமுகுத் தோப்பு ஆகியவைகளுக்கு விதிவிலக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனால் நல்ல சாகுபடியாகக்கூடிய நிலங்களைக்கூட தென்னந்தோப்புகளாகவும், கமுகுத் தோப்புகளாகவும் மாற்றி விட்டால் நல்லது என்று பலர் எங்கள் பகுதியிலே மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். இப்படி வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு 5,000க்கும் குறைவாகவா வருமானம் வருகிறதா என்று பார்த்தால், அதுவும் உண்மைக்குப் புறம்பாகவே தெரிகிறது. நெல் சாகுபடியைக் காட்டிலும் அதிக வருமானம் இதிலே வருகிறது. இந்த விதிவிலக்கும் சரியான முறையல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதேபோல் சர்க்கரை ஆலைகளுக்கு இதிலிருந்து விதிவிலக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த முறையிலே தான் இந்தச் சட்டம் அமைந்துள்ளது. ஆகவே இதையெல்லாம் பார்க்கும்போது நிலச்சுவான்தார்களுக்கு பாதுகாப்பு கொடுக்கக்கூடிய அளவிலே தான் இந்தச் சட்டம் கொண்டு வரப்படுகிறதே தவிர, நிலத்தையே நம்பி வாழக்கூடிய குடியானவர்களுக்கு இதிலே எந்தவிதமான பலனும் இல்லை. இதேபோல் அறநிலையங்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. இதற்குத் தனியாக ஒரு சட்டம் வருவதாக கூறப்படுகிறது. இதோடுகூட, அந்தச் சட்டத்தையும் அமுல் செய்திருந்தாலாவது நன்றாக இருந்திருக்கும். அதையும் செய்யவில்லை. அதேபோல் தனிப்பட்ட நபர்கள் சாரிடிக்கு என்று எழுதி வைத்தால், அந்த நிலங்களுக்கு விதிவிலக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இம்மாதிரி பல தனிப்பட்டவர்கள் தங்கள் சொத்துக்களை சாரிடிக்கு என்று சும்மா எழுதி வைத்துவிட்டு, அதன் பலன் பூராவையும் அனுபவித்துக் கொண்டு வருகிறார்கள். அதற்கும் ஒரு சந்தர்ப்பத்தை இந்தச் சட்டம் இடமளிக்கிறது. ஆகவே இதற்கும் உடனடியாக ஆவன செய்ய வேண்டுமென்று இந்தச் சமயத்தில் கூறிக்கொண்டு, இந்தச் சட்டத்தின் மூலம் மக்கள் எதிர்பார்த்த அளவு எவ்வித பலனும் கிடைக்கவில்லை என்றும், குடியானவர்களுக்கு எந்தவிதப் பாதுகாப்பும் கொடுக்கப்படவில்லை என்றும், அதற்குப் பதிலாக நிலச்சுவான்தார்களுக்குத்தான் பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது என்றும், அவர்கள் முன் ஜாக்கிரதையாக நிலத்தைப் பகிர்ந்து கொள்வதற்குத்தான் உதவி இருக்கிறது என்றும், பிரசாரத்திற்கு வேண்டுமானால் நாங்கள் சட்டம் கொண்டு வந்திருக்கிறோம் என்று சொல்லிக் கொள்ளலாமே தவிர, உழுபவனுக்கே நிலம் சொந்தம் என்ற அடிப்படையிலே இந்தச் சட்டம் கொண்டு வரப்படவில்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொண்டு, என்னுடைய உரையை முடிக்கிறேன்.

9-30 a.m.

* SRI V. K. KRISHNAMOORTHI : கனம் அவைத்தலைவர் அவர்களே, நிலசீர்த்திருத்த உச்சவரம்பு மசோதா நம்முன் நிற்கிறது. மேல்சபை உறுப்பினர்கள்—சட்டமன்ற உறுப்பினர்கள் ஒன்று சேர்ந்து மக்களின் கருத்துக்களை நன்கு தெரிந்து ஜனநாயக ரீதியிலே அமைக்கப்பட்ட நல்ல மசோதா.

ஏகாதிபத்தியம் எடுபட்டபின்னர் அதைச் சார்ந்த இந்திய மாமன்னர்களும்—மாமன்னர்களைச் சார்ந்திருந்த சமீன்களும்—சமீன்களைச் சார்ந்திருந்த இனம்களும் மறைந்தமையைக் காண்கிறோம். பின்னர் நில உடைமை சமுதாயத்திற்குரிமையாக வேண்டுமென்னும் அறக் கருத்துடன் அமைந்திருக்கிறது இம் மசோதா.

உற்பத்திச் சாதனங்களும்—செல்வப்பெருக்கும் பொது நலம் பெருக அரண் செய்வதற்கே இந்த உச்சவரம்பு ஜனநாயக ரீதியிலே உருவாக்கப்பட்டுள்ளது. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க வேண்டுமென்ற நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டுளது இம்மசோதா.

மேல் நாடுகளில் இத்தகைய மாற்றங்கள் புரட்சி—கிளர்ச்சி—போர்—சண்டை—எதிர்ப்பு இன்னபிற நிகழ்ந்த பின்னர் மாற்றங்கள் ஏற்படுவதைக் காண்கிறோம். நம் நாட்டில் இத்தகையவைகள் நிகழாமலே ஜனநாயக முறைப்படி நல்ல மாற்றம் ஏற்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

ஒரு சில அரசியல் கட்சிகள் கிளர்ச்சியினால்தான் இத்தகைய பங்கீடுகள் ஏற்பட்டன என்று பகர முடியாமல் சட்டம் ஏற்பட்டமையால் அரசியல் கட்சி வாதிகள் உரிமை கொள்ள முடியவில்லை. இவர்களுக்கெல்லாம் ஏமாற்றமே.

நில உச்சவரம்பு மசோதா நடைமுறைக்கு வருவதற்கு முன்னர் சட்டத்தால்—சட்டத்தை சமுதாயத்தில் செலுத்தினால்—என்ன மாற்றங்கள் ஏற்படுமோ அவைகள் அனைத்தும் சமுதாயத்தினராலேயே பங்கீடுகள் செய்து ஏற்படுத்தப்பட்டன. இது வரவேற்கவல்லது. நம் சமுதாயத்தின் உயரிய நல்ல பண்பாட்டிற்கு ஒரு எடுத்துக்காட்டு, சட்டத்தைச் செலுத்தி தொந்திரவு கொடுத்து பங்கிட வேண்டுமென்ற கொள்கையுடையவர்கட்கு இது ஓர் ஏமாற்றமே.

சமய மடங்கள்—ஆதீனங்கள் இவைகளுக்குரிய நிலங்கள் மீது உச்ச வரம்பு இருத்தல் வேண்டுமென்று முதலில் கூறி, பின்னர் பொது மக்கள் கருத்துக்களை அறிந்து விதிவிலக்கு அளித்தமை வரவேற்கவல்லது ; இந்திய சட்டம் 26-வது பிரிவின் கீழ் பாது காப்பளிக்கப்பட்டது என்றாலும், விளக்கம் நன்கு அமைந்துள்ளது

In clause 2, the Act shall not apply to lands held by religious trusts of a public nature.

—என்று கூறுகிற காரணத்தால் கைவிடப்பட்டது.

மொழி—கலை—இலக்கியம்—இறைநெறி—இசை—அறம்—பண்பு இன்னபிற மடங்கள் வளர்ந்தன. சமுதாயம் நலமுற நற்பணிகள் ஆற்றி வருகின்றன. பல அரிய செய்யுள்கள்—சித்திர கவிகள்—உரை நடை—இன்னபிற மடங்களால்தான் வளர்ந்தன. பல்கலைக் கழகத்தால் செய்ய முடியாத அரும்பெரும் பணிகள் மடங்கள் புரிந்து வருகின்றன. ஓர் இலட்சம் பாமாலைகள் ஒரே புலவர் படைத்தருளியமை திரு மடத்தினுதவியால் என்பதை யார் மறுக்க முடியும்? இந்த அளவிற்குப் பல்கலைக் கழகம் தமிழ்ப் பணி செய்ய முடியவில்லை.

மடங்களுக்குரிய நிலங்களுக்கு விதி விலக்களித்தமை மிகவும் நல்லதென்று கூறுகின்றேன். திருமடங்களின் தலைவர்கள் ஒழுங்கீனமாக நடந்தால் அவர்களை அகற்ற இந்து அறநிலையப் பாதுகாப்பில் சட்டம் உள்ளது, அச்சட்டப்படி அவர்களை தண்டிக்க வேண்டுமேயன்றி மடங்களை—கோயில்களை ஒழித்தல் கூடாது.

நிலம் எல்லோரும் பெறவேண்டுமென்று கிளர்ச்சியும் முழக்கங்களும் நிகழ்கின்றன. மக்கள் நெருக்கம்—(டென்ஸிடி) நில அளவு—எவ்வளவு என்பதை எண்ணிப்பார்த்தால் நிலைமை நன்கு தெரியும். இதையறிந்தால் இத்தகைய கிளர்ச்சிகள் நிகழா.

நம் நாட்டிலுள்ள நில உடைமை எவ்வளவு? எவரை பாதிக்கும் என்ற புள்ளி விவரத்தை நாம் அறிதல் வேண்டும். இம்மசோதா மிகப் பெரும் பகுதியினரை பாதிக்கவில்லை. முப்பது ஸ்டாண்டர்ட் ஏக்கர்களுக்கு குறைவாக உள்ள நில உடைமையினர் 97·4 சத விகிதம். ஆதலால் இந்தச் சட்டம் 2·6 சத விகிதம் நில உடைமைக்காரரைத்தான் பாதிக்கும். பெரிய மாற்றங்கள் மிகச் சிறிய பகுதியினரைத்தான் கட்டுப்படுத்த வேண்டியுள்ளது, இவர்களுக்குரிய நிலங்கள் உழைப்பாளிகளால்தான் பயிரிடப்படுகின்றன. இந்தச் சட்டத்தால் உழைப்பாளிகளுக்கு ஊறு நிகழவில்லை.

நில உடைமையிலே வந்துள்ள மாற்றம் பாராட்டுதற்குரியது, இதை வரவேற்கிறேன், பாராட்டுகிறேன்.

* SRI S. RAMASWAMI NAIDU : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, சமுதாய நீதி என்பது ஒவ்வொருவரும் ஒரு கோணத்திலிருந்து பார்க்கும்பொழுது ஒவ்வொருவிதமாக இருக்கிறது. சமுதாயத்திற்கு நீதி வழங்கவேண்டும் என்ற முறையிலே முதலில் வருமான மூலங்களில் ஒன்ருன நிலத்தை சீர்திருத்துவது என்று இன்றைக்கு இந்த மசோதா கொண்டுவந்திருக்கிருர்கள். நாட்டில் உள்ள ஒவ்வொருவரும் தங்களுக்கு சாதகமாக உள்ள சமுதாயத்தை கருத்தில்கொண்டு இந்த மசோதாவை நோக்குகிருர்களே தவிர, சென்னை ராஜ்யத்தில் உள்ள எல்லா சமுதாயத்திற்கும் நீதி வழங்கும் முறையிலே இது எந்த அளவுக்கு அமைந்திருக்கிறது என்பதை யாரும் பார்ப்பது இல்லை. தங்கள் தங்கள் அரசியல் தோரணையிலோ அல்லது பொது செல்வாக்கு தோரணையிலோ, எந்த சமூகம் அல்லது சமுதாயம் தன்னை ஆதரிக்கிறதோ

அதற்கு இந்த மசோதா சாதகமாக இருக்கிறதா, இல்லையா என்பதைக் குறிக்கோளாகக்கொண்டு இந்த மசோதாவை அணுகினால், இந்த மசோதாவில் அமைந்திருக்கும் நீதியும், நேர்மையும் புலப்படாமலே போய்விடும். நாட்டில் வருமான மூலங்கள் எத்தனையோ இருந்தால்கூட, முக்கியமாக நிலத்தை முதலில் சீர் திருத்துவோமானால், அதன் மூலமாக மற்றவர்களின் மனம் பக்குவம் அடைந்துவிடும் என்ற காரணத்தினால், இன்றைக்கு நிலச் சீர்திருத்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. ஏராளமான வருமான மூலங்களை அனுபவித்துக்கொண்டிருப்பவர்கள் கூட இந்த நிலச் சீர்திருத்தம் போதாது என்று சொல்லக்கூடிய நிலைமையில் பேசி வருகிறார்கள். ஒருவருக்கு வருமானம் எவ்வளவு வேண்டும், வருமான மூலம் எதுவாக இருக்கவேண்டும் என்று யோசிக்கும்பொழுது, வருமானம் இத்தனைதான் என்று நிச்சய மாகக் கூறமுடியாத நிலையில், நிலம் எவ்வளவு வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருப்பது பொருந்தாத விஷயம் ஆகும். சர்க்கார் அல்லாத மற்ற மூலங்களிலிருந்து உதவி கிடைத்து வாழ்க்கை நடத்தக்கூடிய நிலைமையில் ஒரு குடும்பத்திற்கு என்ன வருமானம் வேண்டும் என்ற அடிப்படையில் நாம் வருமான மூலத்தை நிர்ணயித்தோமானால், நம்முடைய நாட்டில் இருக்கும் வருமான மூலமானது ஒவ்வொரு குடும்பத்திற்கும் போதுமான வருமானம் கொடுக்கக்கூடிய நிலையில் இல்லை, அந்த சமத்துவ அடிப்படையில் நாம் இல்லை என்பதை மறந்துவிடக்கூடாது. ஏழை விவசாயிகள், சிறு நிலச்சுவான்தார்கள், பண்ணைக்கு நிலத்தைப் பிடித்து உழுப வர்கள், யாராக இருந்தாலும் சரி, அவர்களுக்கு ஒரு குடும்பம் இருக்கிறது, அவர்களுக்கு வயதான பெற்றோர்கள் இருப்பார்கள், படிக்கவேண்டிய குழந்தைகள் இருப்பார்கள், நல்ல முறையில் மணம் செய்யவேண்டிய பெண்கள் இருப்பார்கள், வயது காலத்தில் தங்களுக்கு வேண்டிய வசதி செய்து கொள்ள வேண்டியிருக்கும், மழை இல்லாத காலத்தில் காப்பாற்றிக்கொள்ளுவதற்கு பொறுப்பு உள்ள ஒரு நிதி வேண்டும். இவைகளையெல்லாம் ஆராயும்பொழுது கொடுக்கப்படும் வருமான மூலமானது போதாது. ரூபாய் 10,000, 20,000 செலவு மட்டும் செய்கிற வருமான மூலம் உடையவர்கள் கூட இந்த நில மூலங்களை குறைக்க இருப்பதை ஆட்சேபிக்கிறார்கள். ரூபாய் 10,000 உபரியாக செலவு செய்வதற்கு வருமானம் வேண்டும் என்றால், கிட்டதட்ட 2 லட்சம் ரூபாய் மூலதனம் உள்ளவர் களுக்குத்தான் அது சாத்தியமாகும். ஆகவே, சிறு நிலச் சுவாந் தார்களிடம்தான் அதிகமாக நிலம் இருக்கிறது, ரூ. 100-க்குக் குறைவாக தீர்வை செலுத்துகிறவர்கள்தான் அதிகம், என்பதைச் சர்க்கார் கணக்கிலிருந்தே தெரிந்துகொள்ளலாம். நில உச்ச வரம்பு தீர்மானித்த பிறகு, அதிக நிலம் இல்லையா என்று கேட்பது அரசியல் நோக்கம்தான். உண்மையில் புள்ளி விவரங்களைப் பார்த்தால், உச்ச வரம்பு ஏற்படுத்தும்போது, ஏராளமான ஏக்கா நிலங்கள் உபரியாகக் கிடைக்காது. அப்படியிருந்தும், பல கோளாறுகள் சொல்லப்படுகிறது. அவை சரியில்லை.

30th August 1961] [Sri S. Ramaswami Naidu]

சிறு விவசாயிகள் நிலத்தைத் திருப்பி எடுத்துக்கொள்ளுவது பற்றி பல குறைகள் சொல்லப்பட்டது. சற்று நிதானித்துச் சொல்லவேண்டும். ஒரு ஏழை விதவை, மைனர் பிள்ளைகளை வைத்துக்கொண்டு, தனியாக உழுது பயிர் செய்ய முடியாத நிலையில் இருக்கிறாள். பின்னால், அவள் 5 ஏக்கருக்குக் குறைவாக இருந்தாலும், திரும்ப எடுத்துக்கொள்ள உடமையில்லை என்றால், என்ன பிரயோஜனம்? ஒரு நொண்டி, கையாலாகாதவன், இம் மாதிரி மனிதர்கள் தங்கள் நிலத்தை திரும்ப எடுத்துக்கொள்ளக் கூடாது என்று சொல்வதில் அர்த்தம் இல்லை. ஒரு சிறு உத்தி யோகஸ்தர், ப்ராவிடெண்ட் பண்ட் முதலிய பணத்தைக்கொண்டு, வாங்கிய நிலத்தை வைத்துக்கொண்டு விவசாயம் செய்யவேண்டு மென்றால், அவர் அதை அனுபவிக்க முடியாது என்றால், ஏழை குடும்பஸ்தருக்கு மனநிம்மதி இருக்குமா என்று யோசிக்க வேண்டும். ஏராளமாக வருமானமூலம் உள்ளவர்களுக்கு மனதில் படும்படி இன்றைக்கு முதன் முதலாக நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுகிறோம் என்பதை நாம் எல்லோருமே மனதில் கொள்ள வேண்டும். மற்றவர்கள் வேறு வருமான மூலங்கள் உள்ளவர்கள், நாம் தப்பிக்கொண்டோம் என்று எண்ணாமல் அவர்கள் உடமைக்கும், வருமானத்திற்கும் வரம்பு கட்டும் காலம் வரும் என்று தெரிந்துகொள்ளவேண்டும். மூன்று தலைமுறைகளாக, உடமைகள் பொதுவாக இருக்கும், சில நாடுகளில்கூட இன்றைக்கும் எல்லா தொழில்களும் செய்கிறவர்கள்தான் இருக் கிறார்கள். எல்லோருமே படித்து, வக்கீல்களாகவும், டாக்டர்களாக வும், மேதாவிகளாக இருக்கவில்லை. கூலி வேலை செய்கிறவர்களும் இருக்கிறார்கள். சில்லரை வேலைகள் செய்கிறவர்களும் இருக் கிறார்கள். வருமான மூலம் சமமாக ஆகிவிட்டால், மக்கள் எல்லோருமே ஒரே படியில் வந்து விடுவார்கள் என்று நினைப்பது சரியில்லை என்பதை பொதுவுடமையை அனுஷ்டிக்கும் நாடுகளின் நிலைமையிலிருந்து அறிகிறோம். சமுதாயத்திற்கு நீதி நல்க வேண்டும், அநீதி ஏற்படாமல் இருக்கவேண்டும் என்பதற்காக. நில உடமைச் சட்டத்தைக்கொண்டு வந்திருப்பதை நாம் வர வேற்கவேண்டும். அதிகமான நிலப் பரப்பு உள்ளவர்கள் மனதில் நல்லெண்ணம் தோன்றும்போது, மற்ற வருமான மூலம் உள்ளவர் களும், தொழில் துறையிலும், வியாபாரத் துறையிலும், மற்றத் துறைகளிலும், மனஉருத்தலை அடைவார்கள் என்பதில் சந்தேக மில்லை. நிலத்தின் மீது உள்ள ஆசையைக் குறைக்கவே இந்த உச்ச வரம்புச் சட்டம் வருகிறது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். விவசாயிகளுக்கு ஒரு ஏக்கர் நிலமானாலும், கலப்பை திரும்பாத ஓரத்தில் இருந்தாலும், அவர்கள் அதை அனுபவிக் காமல் இருக்கமாட்டார்கள். நாலு செண்ட் ஒரு பக்கத்தில் இருக்கும், இன்னொரு நாலு செண்ட் மற்ற பக்கத்தில் இருக்கும். இருந்தாலும் அதில் அவர்களுக்கு உள்ள பற்று மட்டற்றது. அவர்களுக்கும் பிரமாதமான ஆதாயம் கிடைத்து விடுவதில்லை. ஒன்றரை கோட்டை விளைவது, 4, 5 கோட்டையாக வேண்டு

மானல் பெருகலாம். ஆனல் அதுவே, 10, 15 கோட்டை என்று பெருகிவிடாது. ஆனலும், வேறு வழியில்லாத காரணத்தினல், விவசாயி நிலத்தில் ஆசை வைத்திருக்கிருன்.

60 : 40 சட்டம் கொண்டுவந்த சர்க்கார், குடியிருப்பை வெளியேற்றக் கூடாது என்ற சட்டம் செய்த சர்க்கார், பண்ணையாள் பாதுகாப்பு சட்டம் கொண்டுவந்த சர்க்கார், யாருக்கும் பயந்து, இந்தச் சட்டத்தைச் செய்யவில்லை. எந்த அரசியல் பயத்தாலும் இதைச் செய்யவில்லை. ஆளும் கட்சிக்கு எல்லாத் துறையினரையும் பக்குவப்படுத்த வேண்டுமென்று, சமுதாயத்திற்கு நீதி வழங்க வேண்டுமென்று, இந்தச் சட்டத்தை முதலாவதாகச் செய்திருக்கிருர்கள். யாருக்கும் பயந்துகொண்டு வரவில்லை என்பதை மறக்கக்கூடாது. தோப்புகளும், மற்ற சில பிரதேசங்களும் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. மற்ற சாதாரண விவசாய நிலம் எதுவானலும், என்ன பயிர் செய்தாலும் அவை இந்த உச்ச வரம்பின் கீழ் வரும். அதன் மூலம் ஒரு குடும்பத்திற்கு நிச்சயமாக ஒரு உச்ச வரம்பு ஏற்படுகிறது. தேர்தலிலே ஒரு பகுதியினரின் நன்மதிப்புப் பெற வேண்டும் என்று இது கொண்டுவரப்படவில்லை. ஆகவே, இன்றைக்கு முதலாவதாக நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டப்படுகிறது. இது ஒரு புரட்சிகரமான சட்டம் என்பதை நாம் மனதில் கொள்ளவேண்டும். இதன் மூலம் வேறு வருமானமூலம் உள்ளவர்கள் மனதில் இது பட்டு அவர்கள் மனப் பக்குவம் அடைய வேண்டும் என்று செய்யப்பட்டிருக்கிறது. இந்த மசோதாவை பொறுக்குக் குழுவிலே நன்ருகப் பரிசீலனை செய்து முடிவுகள் எடுத்திருக்கிருர்கள். ஆகவே, இதை அனைவரும் வரவேற்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, **முடிக்கிறேன்.**

**SRI S. M. ANNAMALAI :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இப்பொழுது சட்டமன்றத்தின் முன்னல் வந்திருக்கும் நில உச்சவரம்பு மசோதாவைக் குறித்து உண்மையிலேயே மிகமிக வேதனைப்படுகிறேன், வருத்தமுறுகிறேன். காரணம் அமைச்சரவர்கள் முன்பெல்லாம் சட்ட மன்றத்திலே சொல்லிவந்தது போல், முதலில் இது பசுத்தோல் போர்த்த புலியாக இருந்தது. பின்னல், செலக்ட் கமிட்டியில், பசுவையும் சாகடித்து, வைக்கோல் திணித்து, தோல் போர்த்த புலி என்று சொல்வது போல் அமைந்திருக்கிறது. இதற்கு முன்னல் வந்த சில சட்டங்களைப் பார்க்கும்போது, சர்க்காருடைய கொள்கை, சமூகத்தில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கக் கூடாது என்ற அடிப்படையை ஒட்டித்தான் இந்த மசோதாவும் கொண்டு வரப்படுகிறது என்று சொல்லப்பட்டது. அதைப் போலவே, காங்கிரஸ் கட்சியினல் நியமிக்கப்பட்ட ஒரு கமிட்டியின் அறிக்கையிலே இந்த நில உரிமையைப்பற்றி என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்று பார்ப்போம் :

'On the question of rights in land, the Committee is of opinion that these should be shared between the community and the tiller.'

சமூகத்திற்கும் சாதாரணமாக உழுகின்றவர்களுக்குமேதான்

30th August 1961] [Sri S. M. Annamalai]

உரிமையிருக்க வேண்டுமே தவிர மத்தியிலிருக்கும் யாருக்கும் உரிமை இருக்கக்கூடாது என்று இந்த அக்ரேரியன் ரிபார்ம்ஸ் கமிட்டி அறிக்கையிலே சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி இரண்டு கொள்கைகளை வைத்து, சர்க்கார் சமூகத்திலே ஏற்றத் தாழ்வுகள் இருக்கக்கூடாது என்ற காரணத்தையொட்டி இந்த மாசோதாவை கொண்டு வந்திருக்கிறார்களா? அப்படி இந்தக் கமிட்டி சொல்லி யிருப்பதைப் போலவே சமூகத்திற்கும் உழுகின்றவர்களுக்கும் தான் உரிமையிருக்க வேண்டுமென்ற கொள்கை இந்த மசோதாவில் இருக்கிறதா என்று பார்த்தால், கிடையவே கிடையாது. இதைப் பார்க்கும்பொழுது நாம் மிகவும் வேதனைப்படக்கூடிய நிலையிலே இருக்கிறோம். முதலிலே பண்ணையாள் பாதுகாப்புச் சட்டத்தைக் கொண்டு வந்தோம். அடுத்தபடியாக, சாகுபடியாளர் பாதுகாப்பு சட்டத்தைக் கொண்டு வந்தோம். அப்புறம் நியாய வாரச் சட்டத்தை கொண்டு வந்தோம். அதற்கு பிறகு விவசாய வருமான வரி சட்டத்தைக் கொண்டு வந்தோம். இந்த சட்டங்கள் அனைத் திற்கும் கடைசியாக இந்த நிலச் சீர்திருத்த சட்டத்தை இப்பொழுது கொண்டு வந்திருக்கிறோம். நில உச்சவரம்புச் சட்டம் வரப்போகிறது என்ற அடிப்படையில்தான் இந்த நாலு சட்டங் களும் ஏற்படுத்தப்பட்டன. கிட்டக் கமிஷன் சொல்லியிருக்கிற படி மூவாயிரத்து அறுநூறு ரூபாய் வருமானம் இருந்தால் போதும் என்ற அடிப்படையில்தான் நாம் அக்ரிகல்ச்சரல் இன்கம் டாக்ஸ் சட்டத்தை இந்த சட்ட மன்றத்திலே நிறைவேற்றினோம். அப்படி நிறைவேற்றுகிறபொழுது ஒரு ஏக்கருக்கு கட்டாயம் 300 ரூபாய் நெட் இன்கம் வரும் என்ற அடிப்படைக் கொள்கையை ஒட்டித் தான் பன்னிரண்டரை ஏக்கரா இருந்தால் போதும் என்று சொன் னோம். பன்னிரண்டரை ஏக்கராவுக்கு மேல் உள்ள நிலத்திற்கு விவசாய வருமான வரி செலுத்தப்பட வேண்டுமென்ற அடிப் படைக் கொள்கையை ஒட்டித்தான் இந்த அக்ரிகல்ச்சரல் இன்கம் டாக்ஸ் சட்டத்தை நிறைவேற்றினோம். இப்பொழுது பார்க்கும் பொழுது, எங்களுடைய கொள்கையை நிறைவேற்றுகிறோம் என்று பல சட்ட மன்ற உறுப்பினர்கள் பேசுகிறார்கள். இதிலே ஆளும் கட்சி, மாற்றுக் கட்சி என்று இருக்கவேண்டிய அவசியமேயில்லை. ஆனால் சட்ட மன்றத்திலே நடக்கின்ற விவாதத்தைப் பார்க்கும் பொழுது ஒரு சிலர் நிலச்சுவாந்தார்களுக்காகப் பரிந்து பேசுவதும் ஒரு சிலர் நிலமற்ற ஏழைகளுக்காக பரிந்து பேசுவதுமாக இரண்டு கட்சிகள்தான் இருக்கின்றன. கட்சிகள் பல இருந்தாலுங்கூட, சட்ட மன்றத்தில் பேசுகிற நேரத்திலே ஆளும் கட்சி, மாற்றுக் கட்சி என்ற வித்தியாசம் இல்லாமல், பாமர மக்களுக்காக ஒரு சில சட்ட மன்ற உறுப்பினர்களும், நிலச்சுவான்தார்களுக்காக ஒரு சில சட்டமன்ற உறுப்பினர்களும் பேசுவதைப் பார்த்தால் எந்த அளவிலே நம்முடைய நாட்டின் பிரச்சனை இருக்கிறது, எந்த அளவிலே பாமர மக்களுடைய உள்ளம் நாட்டம் பெற்றிருக்கிறது, என்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். நாம் நான்கு சட்டங்களை நிறைவேற்றியிருக்கிறோம். இந்த சட்டங்கள் மூலமாக உபரி நிலத்தை நிலமற்றவர்களுக்கு பங்கிட்டு தரப்போகிறோம்

என்று சொன்ன கொள்கை உண்மையிலேயே இந்த மசோதாவின் மூலம் நிறைவேற்றப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் கிடையவே கிடையாது. அந்தக் கொள்கைகள் அத்தனையும் தோற்கடிக்கப் பட்டு இருக்கின்றன. வாரத்துக்கு பயிர் செய்யக்கூடியவர்களை வெளியேற்றக்கூடிய நிலைமை இருக்கிறதா என்று பார்த்தால், லட்சக்கணக்கானவர்களை வெளியேற்றக்கூடிய நிலைமை இந்த மசோதாவின் மூலமாக வருங்காலத்தில் ஏற்படப்போகிறது என் பதை நான் அமைச்சர் அவர்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன். இந்த மசோதா சட்ட மாகட்டும். சட்டமான பிறகு இந்த நாட்டிலே எந்த விதமான புரட்சி ஏற்படப் போகிறது என்பதை அமைச்சரவையோ, ஆளும் கட்சியிலுள்ளவர்களோ சிந்தித்து பார்த்தால் நன்றாக விளங்கும். அதே நேரத்திலே, பிற மாநிலங் களிலே எப்போதைக்கப்போது இப்படிப்பட்ட சட்டத்தை இயற்றி யிருக்கிறார்கள் என்பதைப் பார்ப்போம். அஸ்ஸாம் மாகாணத்திலே 12—11—1955-லிருந்து இந்த சட்டம் அமுலுக்கு வந்திருக்கிறது. பம்பாய் மாநிலத்திலே 15—1—1959-லிருந்து அமுலுக்கு வந்திருக் கிறது. கேரளாவிலே 18—12—1957-லிருந்தும், பஞ்சாப் மாநிலத் திலே 15—8—1947-லிருந்தும், ராஜஸ்தானிலே 1—1—1957-லிருந் தும் உத்திரப் பிரதேசத்திலே 15—8—1959-லிருந்தும், டில்லியிலே 10—2—1959-லிருந்தும் இந்த சட்டம் அமுலுக்கு வந்திருக்கிறது. இதைப் பார்க்கிறபொழுது மற்ற மாநிலங்களிலே இந்தமாதிரி ஒரு சட்டத்தை இயற்றி அது அமுலுக்கு வந்தபிறகு நாம் இந்தச் சட்டத்தை இப்பொழுது இங்கே கொண்டு வந்திருக்கிறோம். விவசாய வருமான வரி சட்டத்தை நிறைவேற்றிய காலத்திலேயே, நிலச்சுவான்தார்கள் 12½ எக்கராவுக்கு மேலே உள்ள நிலத்தை பிரித்து எழுதி வைத்துவிட்டார்கள். அந்தக் காலத்திலே எழுதி வைக்க தவறியவர்கள் ஓரிருவர் இந்த உச்ச வரம்பினால் பாதிக்கப் படக்கூடிய நிலைமையில் அப்பொழுது இருந்தார்கள். அதாவது 30 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று நிர்ணயிக்கப்பட்ட காலத்திற்கு முன்பு இந்த விவசாய வருமான வரியிலிருந்து தப்பித்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்தவர்கள்தான் இருந்தார்கள். அதற்குப் பிறகு இந்த மசோதா வருவதற்கு முன்னால் நமது அமைச்சர் அவர்கள் பல இடங்களுக்குச் செல்லும்பொழுது "30 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று நிர்ணயிக்கப்படலாம்" என்று சொன்னதன் காரண மாக பல நிலச்சுவான்தார்கள் 30 ஏக்கரை வைத்துக்கொண்டு அதற்கு மேலுள்ளதை பிரித்து எழுதி வைத்துவிட்டார்கள். இந்த மசோதா சட்டமன்றத்தின் முன்னால் வைக்கப்பட்டபொழுது, 6—4—1960-க்கு முன்னால் பத்திரம் எழுதி ரிஜிஸ்டர் ஆகாமல் இருந் தால் அதைக் கட்டுப்படுத்தும் என்றிருந்தது. ஆனால் இப்பொழுது இருக்கக்கூடிய மசோதாவைப் பார்த்தால், பத்திரம் எழுதி பிறகு ரிஜிஸ்டிரேஷன் செய்தாலும்கூட தாராளமாகச் செய்யலாம், என்ற முறையிலே சலுகை கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைவிட வேதனை தரக்கூடிய மசோதா வேறு ஒன்றும் இருக்க முடியாது. எந்த அளவுக்கு நிலச்சுவான்தார்கள் தப்பித்துக்கொள்ள முடியுமோ

30th August 1961] [Sri S. M. Annamalai]

அந்த அளவுக்கு இந்த சர்க்காரே உடந்தையாக இருந்து வேண்டிய அனைத்தையும் செய்திருக்கிறது. இந்த சர்க்காரே இப்படி செய்து விட்டு, அவரவர்களே பிரித்துக்கொண்டு விட்டார்கள், நாங்கள் என்ன செய்வது என்று சொல்வது அவ்வளவு நல்லதல்ல. அதை விட அடிக்கும் விதத்திலே, "உங்களுக்கு நிலம் கொடுக்க முடியாது" என்று சொல்லியிருக்கலாம். இது எப்படியிருக்கிற தென்றால் ஒரு பிச்சைக்காரனுக்கு, "இங்கே வாப்பா, பிச்சை போடுகிறேன்" என்று சொல்லி அவனுடைய பாத்திரத்திலே இருக்கக்கூடிய சோற்றை பிடுங்கிக்கொண்டு பிச்சை போட முடியாது என்று சொல்வது போலிருக்கிறது. உபரி நிலத்தை பாமர மக்களுக்கு பிரித்துக் கொடுக்கப் போகிறோம், சோஷலிஸ்ட் பேட்டர்ன்தான் எங்களுடைய கொள்கையாக இருக்கிறது என்று மக்களிடத்திலே பறைசாற்றிவிட்டு, இந்த உச்சவரம்பு மசோதாவை கொண்டு வருகிற நேரத்திலே உபரி நிலம் ஒரு சில ஏக்கர்கள் தான் இருக்கும் என்று சொன்னால், இதை நிலச்சீர்த்திருத்த சட்டம் என்று சொல்லுவது பொருந்தாது. அதற்கு மாறாக நில ஏமாற்றுச் சட்டமாக அமைந்துள்ளது என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக "குடும்பம்" என்பதற்கான வியாக்கியானம் சரியாக அமைக்கப்படவில்லை. மணிப்பூர் சட்டத்திலேயுள்ள டெபனிஷனையாவது இந்த மசோதாவிலே பொருத்தியிருக்கலாம். இங்கே கொடுக்கப்பட்டிருக்கிற "குடும்பம்" என்பதற்குண்டான வியாக்கியானத்தைப் பார்த்தால் சட்ட பூர்வமாக சிக்கல்கள் வருங் காலத்தில் ஏற்படுமென்று தோன்றுகிறது. அதனால்தான் இன்டிவி ஜுவல் ஸீலிங் வைக்கவேண்டும். ஒரு ஆளுக்கு 3 ஏக்கர் என்று நிர்ணயித்துவிட்டால் எவ்விதமான சட்ட சிக்கலும் வருங்காத்திலே வராது. ஒரு ஆளுக்கு 3 ஏக்கர் என்று வைக்கலாம். இது அதிக பட்சம் ஒரு ஆளுக்கு மூன்று ஏக்கர் என்று வைக்கிறபோது ஒரு குடும்பத்தினர் அதிகபட்சம் 24 ஏக்கர்தான் வைத்துக்கொள்ள வேண்டும் என்று நிர்ணயிக்க வேண்டும். 10-30 a.m.

**DEPUTY SPEAKER :** கனம் அங்கத்தினர் அவர்களுக்கு கொடுக்கப்பட்ட காலம் முடிந்துவிட்டது.

**SRI S. M. ANNAMALAI :** இன்னும் இரண்டு நிமிஷம் கொடுக்கவேண்டும்.

**DEPUTY SPEAKER :** டிசென்டிங் மினிட்டில் கொடுத்திருப் பதையேதான் கனம் அங்கத்தினர் இங்கே சொல்கிறார். அதில் உள்ள விஷயங்களைத் திருப்பிச் சொல்ல வேண்டியது இல்லை.

**SRI S. M. ANNAMALAI :** இந்தச் சட்டத்தை 1952-ல் இருந்தே அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதைப்போல டெனண்ட்ஸ் சீலிங் 5 ஏக்கர் என்று வைக்கப்போவதாகச் சொன்னார்கள். இங்கே 3 ஏக்கர் என்று செய் திருக்கிறார்கள். டெனண்ட்ஸ் என்பதற்கு டில்லர் ஆப் தி சாயில்

என்று டெபனிஷன் கொடுக்கப்பட வேண்டும். அப்போதுதான் பல தகராறுகளுக்கு இடம் இருக்காது. நஷ்டஈடு கொடுக்கிற போதும் அக்ரிகல்சரல் இன்கம் டாக்ஸ் ரிடர்ன்ஸ் அடிப்படையிலேயே கொடுக்கப்பட வேண்டும். அறநிலையங்களுக்கு விதிவிலக்குக் கொடுப்பது நியாயம் அல்ல. அவற்றையும் இந்தச் சட்ட அடிப்படையில் கொண்டுவர வேண்டும் என்பதற்கு அரசியல் அமைப்பைத் திருத்த வேண்டுமென்றாலும் மத்திய சர்க்காருக்கு எழுதி அதைத் திருத்துவதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்பதாகச் சொல்லிக்கொண்டு இந்த மசோதாவை நான் ஆட்சேபிக்கிறேன்.

* **SRI T. IRUSAPPAN** : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த நாட்டிலே வாழக்கூடிய உழைப்பாளி மக்கள், விவசாய மக்கள் நில உச்சவரம்புச் சட்டம் வந்தால் நிலமற்ற ஏழைகளாகிய தங்களுக்கு எல்லாம் நிலம் கிடைக்கும் என்ற நம்பிக்கையிலே இருந்தவர்கள் பெரும் ஏமாற்றம் அடையும் வகையில் இந்த மசோதா இங்கு கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதுவரையிலும் நிலமில்லாத ஏழைகளுக்கு எல்லாம் நிலம் தரப்போவதாக ஆளும் கட்சி சர்க்கார் இதுவரையில் சொல்லிக்கொண்டு வந்தார்கள். ஆனால் இன்றையதினம் அந்த ஏழைகளை ஏமாற்றுகிற வகையில் இந்தச் சட்டம் வந்திருக்கிறது. ஒரு சென்டாவது இந்தச் சட்டப்படி நிலமில்லாத ஏழைகளுக்குக் கொடுக்கப்படுமா என்றால் இல்லவே இல்லை. பலர் நிலத்தைவிட்டு வெளியேற்றப்படுகிற நிலைமைதான் ஏற்படும். இன்றையதினம் நில உச்சவரம்பு 30 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று வைத்திருக்கிறோம். இதனால் உள்ளபடியே கொஞ்சம்கூட நிலம் பிரித்துக் கொடுப்பதற்குக் கிடையாது. உண்மையிலேயே தாழ்த்தப்பட்ட மக்களுக்கு, பிற்பட்ட மக்களுக்கு, ஏழை எளிய விவசாய மக்களுக்கு நிலம் கொடுப்பது என்றால் கண்டிப்பாக இந்த ஸ்டாண்டர்ட் ஏக்கரை 15 என்று நிர்ணயிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் இந்தச் சட்டத்தினால் யாரும் நிலத்தில் இருந்து வெளியேற்றப்படாமல் பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டும், இல்லாவிட்டால் மீண்டும் நிலச்சொந்தக்காரர்களே பயன் அடையத்தக்க வகையில் இது அமையும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கோயில் நிலங்களை இன்னும் என்ன செய்வது என்பதுபற்றி பரிசீலிக்கப்படவில்லை. இன்றையதினம் நிலம் படைத்தவர்கள் முன்கூட்டியே தங்கள் நிலங்களை நில உச்சவரம்புச் சட்டத்தினால் பாதிக்கப்படாத வகையில் பிரித்துக்கொண்டு விட்டார்கள். காலம் தாழ்த்தியே இப்போது இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. கோயில் நிலங்கள், மடாலய நிலங்கள் இவற்றைக்கூட பிரித்துக்கொடுக்க முடியாமல் அரசாங்கத்தார் ஏன் தயங்குகிறார்கள், ஏன் மயங்குகிறார்கள் என்று புரியவில்லை. அவற்றையெல்லாம் இன்றையதினம் ஆண்டவன் பெயரால் உழைப்பவனுக்கு உரிமையாக்க வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன். நில உச்சவரம்புச் சட்டம் தோப்புகளுக்கு

இல்லை. அதேபோல நிலம் படைத்தவர்கள் கால்நடைப் பண்ணை என்று சொல்லி நிலத்தை விலக்கிக்கொள்ள இடமும் இருக்கிறது. அவர்கள் எல்லாம் இப்போது 300, 400 என்று வைத்துக்கொள்ள இடமும் ஏற்பட்டுவிடுகிறது. இன்றையதினம் தோப்புகளிலேகூட நிலத்தைக் காட்டிலும் அதிகமான வருமானம் வருகிறது. பாக்குத் தோப்பு, தென்னந் தோப்பு, ஏலக்காய் தோப்பு இவைகளையெல்லாம் விட்டுவிட்டோம். ஆகவே, உண்மையில் இந்தச் சட்டம் உழைப் பாளிகளுக்கு அல்ல, பாடுபடக்கூடிய விவசாயிகளுக்கு அல்ல, நிலம் இல்லாத ஏழைகளுக்காக அல்ல—ஆகவே, இதை அப்படியே ஆதரிப்பதற்கில்லை என்று சொல்லி என் உரையை முடித்துக்கொள் கிறேன்.

* **SRIMATHI A. S. PONNAMMAL:** மதிப்பிற்குரிய சட்ட மன்ற துணைத் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கக்கூடிய நிலச்சீர்திருத்த மசோதாவை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூறிக்கொள்ள விரும்புகிறேன். 30 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று வைத்திருப்பது உண்மையில் வரவேற்கத்தக்கதுதான். ஏதோ மாற்றுக் கட்சியில் இருக் கிறோமே, எதிர்க்கட்சியில் இருக்கிறோமே என்பதற்காக சிலர் அர்த்தமற்ற முறையில் இது அநியாயமானது என்று எதிர்ப்ப தாகவே நான் கருதுகிறேன். அது நல்லது அல்ல, முறையல்ல என்று நான் சொல்ல விரும்புகிறேன். இன்றைக்குப் பல ஆயிரக் கணக்கான ஏக்கர் வைத்திருந்தவர்கள் எல்லாம் அந்த நிலத்தை 30 ஏக்கர்களுக்கு மேல் போகாமல் பிரித்திருக்கிறார்கள். ஐந்து பேர்கள் உள்ள குடும்பத்திற்கு 30 ஏக்கர் என்பது அதிகமல்ல. பின்னால் அவர்களுடைய பிள்ளைகளுக்குத் திருமணம் நடந்து, பேரன் பேத்தி என்று பிரிகிறபோது அது மூன்று ஏக்கர், இரண்டு, ஒன்று என்றுகூடப் பிரிந்துபோகும். சர்வோதயத்தில் அதிக நம்பிக்கையுள்ள நானே இது நியாயமானது என்று கூறுவதாக என் தொகுதியில் போய்ச் சொல்லலாம். அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. யாருக்கோ எழுதிவைத்து விட்டார்கள் என்கிறார்கள். யாருக்கும் எழுதி வைக்கவில்லை. நிலத்தில் இது காறும் உழைத்து வந்தவர்களுக்கே நிலத்தை கிரயத்திற்கு எழுதிக் கொடுத்து பல ஆண்டுகளில் கொஞ்சம் கொஞ்சமாக அந்தப் பணத்தைக் கொடுக்கலாம் என்ற வகையில் எழுதி வைத்திருக் கிறார்கள். அதிலும் ஒன்றும் தப்பில்லையென்று நான் கூற விரும்பு கிறேன். இங்கே பேசிய திராவிட முன்னேற்றக் கழகத்தினர் 15 ஏக்கர்தான் வைக்கவேண்டுமென்று பேசினார்கள். இன்னொரு அங்கத்தினர் தாம் சுதந்திராக் கட்சியைச் சேர்ந்தவர் அல்ல என்று கூறிக்கொண்டு—இந்த நிலச் சீர்திருத்தச் சட்டம் வந்தால் மரியாதை எல்லாம் குறைந்துவிடும், அதோடு தர்மத்தை நிலை நாட்ட முடியாது என்றெல்லாம் பேசினார்கள். ஒருவர் நில உச்ச வரம்பு 15 ஏக்கருக்கு மேல் கூடாது என்கிறார். இன்னொருவர் இதுவே தப்பு, மரியாதை, தர்மம் எல்லாம் போய்விடுமே என்கிறார். இப்படி முரண்பாடான கருத்துடையவர்கள்

எல்லாம் தேர்தலில் காங்கிரசுக்கு எதிராக தேர்தல் கூட்டணி ஏற்படுத்திக்கொள்ளப்போவதாகவும் சொல்லிக்கொள்கிருர்கள். இது எலியும் தவளையும் சிநேகம் கொண்ட கதையைப்போலத் தான் இருக்கிறது. இரண்டும் நண்பர்களாக இருப்போம் என்று சொல்லிக்கொண்டு ஒரு கயிற்ருல் தங்களைக் கட்டிக்கொண்டதாம், ஒரு பருந்து பறந்து வந்தபோது தவளை பயந்துகொண்டு தண்ணீரில் தொப்பென்று குதித்துவிட்டது. எலியும் சேர்ந்து தண்ணீரில் குதித்தது. எலியினுல் தண்ணீரில் இருக்க முடியாமல் தண்ணீரைக் குடித்து இறந்துவிட்டதாம். பின் அது தண்ணீரில் குதிக்க அதைப் பார்த்து ஆகாயத்தில் வட்டமிட்ட பருந்து எலியைத் தூக்கிப் போகும்போது, தவளையும் சேர்ந்து போய் பருந்துக்கு இறையானது போல் இவர்கள் கூட்டு ஆகிவிடும். (திரு. ப. வு. சண்முகம்: கேரளா தேர்தல் கூட்டு?) அங்கே பிற கட்சிகளுடன் காங்கிரஸ் கூட்டு சேர்ந்தது என்ருல் சோஷலிஸ சமுதாய அமைப்பை எல்லாக் கட்சிகளும் ஒப்புக்கொண்ட அளவில்தான் சேர்ந்தார்கள். ஆனல் இங்கேயுள்ளதுபோல நிலச்சீர்திருத்தச் சட்டமே கூடாது என்பவர்களும், 15 ஏக்கருக்கு மேல் வைக்கக் கூடாது என்பவர்களும் ஒன்று சேருவது வேடிக்கைக்கு இடமானது. அடுத்து கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்களும் இதில் சேருவதென்ருல் இன்னும் வேடிக்கைதான். ஏழைகளுக்குப் பாடுபடக்கூடியவர்களாக இருந்தால் ஏழைகளின் நிலையை உணர்ந்தவர்களாக இருந்தால் நிச்சயமாக இவர்களோடு கம்யூனிஸ்ட் ஒரு போதும் கூட்டுச் சேராது என்று நம்புகின்றேன். நியாயமாக பார்க்கப் போனல் அவர்கள் இந்தக் கூட்டுறவில் சேரமாட்டார்கள் என்றும் நம்புகிறேன். அப்படிச் செய்தால்தான் நாட்டிற்கும் சமுதாயத்திற்கும் நல்லது என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஜனங்கள் சும்மா இருப்பார்கள், நாம் அவர்களை ஏமாற்றிக் கொண்டே இருக்கலாம் என்று அவர்கள் நினைத்தால் யானை குளிக்கப்போய் சேற்றை வாரி தலைமேல் போட்டுக்கொண்டது போல்தான் ஆகும். அவர்கள் ஜனங்களிடம் என்ன சொல்லுகிருர்கள் என்ருல் 'நாங்கள் சட்டசபையில் சண்டைப் போட்டுத்தான் சட்டம் வந்தது' என்று சொல்லுகிருர்கள். சூரியன் காலையில் 6 மணிக்கு உதயம் ஆகிறது. ஒரு ஞானி தவத்தில் உட்கார்ந்துகொண்டு நான் 4 மணியிலிருந்து தவம் செய்தால்தான் சூரியன் 6 மணிக்கு உதயமாஞன், என்று சொன்ஞனும். அதுபோல் சட்டங்கள் எல்லாம் வருகிறதென்ருல் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் அதிகமாக இருப்பதனுல்தான் நிறைவேற்றப்படுகின்றன. அப்படி நிறைவேற்றப்படும்போது எதிர்கட்சியில் சொல்லுகின்ற ஒருசில திருத்தங்கள் நல்லதாக இருந்தால் அவைகளை சர்க்கார் ஏற்றுக்கொள்ளுகிருர்கள். அப்படியிருக்கும்போது எதிர்க்கட்சிக்காரர்களால்தான் சட்டங்கள் கொண்டுவரப்படுகின்றது என்று வெளியே சொல்லுகிருர்கள். இப்படியாக வெளியே ஒன்றும் சட்ட சபையில் ஒன்றுமாக அவர்கள் பேசிக்கொண்டிருப்பது நல்லதல்ல என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

30th August 1961] [Srimathi A. S. Ponnammal]

இன்னும் இந்த சட்டத்திலே சில குறைபாடுகள் இருக்கின்றன என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். அசல் மசோதாவில் கோவில் நிலங்களில் 200 எக்கருக்கு மேல் இருப்பனவற்றிற்கும் இந்த மசோதாவில் இடம் இருக்கிறது. அதை மாற்றி இந்தக் கோவில் நிலங்கள் சட்ட வரம்புக்கள் வாராதபடி செய்து விட்டார்கள். இது நல்லதல்ல. கோவில் நிலங்கள் சம்பந்தப்பட்டவரை 200 ஏக்கர் வரை சீலிங் வைத்துவிட்டு அது போக மீதி இருக்கக்கூடிய நிலத்தை ஏழை விவசாய மக்களுக்கு கூட்டுறவு முறையில் சாகுபடி செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். இதுபோன்று கரும்பு, ஏலக்காய் முதலிய தோட்டங்களுக்கு விதிவிலக்கு கொடுக்கப்பட்டது. இம்மாதிரி இந்த அடிப்படையில் சீலிங் கொண்டு வந்தால் இந்தச் சட்டம் இன்னும் நல்லமுறையில் அமுலாக வழி வகை ஏற்படும் என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நான் ஏரியா கமிட்டியில் மெம்பராக இருக்கிறேன். ஒரு நபர் பல எக்கர் நிலத்தை குத்தகை 400 ரூபாய்க்கு எடுத்து இரு போகம் சாகுபடியும் செய்துவிட்டு, அந்த குத்தகைப் பணம்கூட 32 எக்கர் நிலத்தில் விளையவில்லை, ரைட் ஆப் செய்யுங்கள் என்று மனுக் கொடுக்கின்றார். இம்மாதிரியான நிலையை போக்கவேண்டுமென்றால் குத்தகைக்கும் சீலிங் வைத்து 5 ஏக்கருக்கு மேல் குத்தகைக்கு விடாமல் தடுக்கவும் அரசாங்கம் தக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன். ஏனென்றால் குத்தகை எடுத்துக்கொண்ட குத்தகைக்காரர்கள் இன்னொருவற்கு சப்-லீஸ் விடுகின்றார். அவர்கள் இன்னொருவருக்கு சப்-லீஸ் விடுகின்றார். இந்தமாதிரியே பல பேருக்கு சப்-லீஸ் விடப்படுகின்றது. ஆகையால் 5 எக்கர் என்ற அடிப்படையில் குத்தகைவிட்ட நிலத்திற்கு உச்ச வரம்பு இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இன்னும் கொஞ்சம் தாராள மனப்பான்மை காட்டி நல்லமுறையில் ஆராயவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த மசோதாவில் காம்பன்சேஷனைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. காம்பன்சேஷன் கொடுப்பதில்லை என்று ஒரு அங்கத்தினர் சொன்னார். எவ்வளவு அதிகப்படியாக காம்பன்சேஷன் கொடுக்க முடியுமோ அந்த அளவுக்கு கொடுக்க வேண்டுமென்று சுதந்திரா கட்சி அங்கத்தினர்கள் சொன்னார்கள். இதுமாதிரி காந்திஜி அவர்கள் லூயி பிஷருக்குச் சொன்னபோது ஏழைகள் இந்த நாட்டிலே அதிகமாக இருக்கிறார்கள்; ஆகவே இதற்காக அவர்களுக்கு எப்படி காம்பன்சேஷன் கொடுக்க முடியும் என்று சொன்னார்கள். இந்த அடிப்படையில் பார்ப்போமானால் காம்பன்சேஷன் கொடுப்பதிலே ஓரளவிற்குத்தான் கொடுக்க முடியும். அதற்கு 2½ சத விகிதம் வட்டியும் சேர்த்துக்கொடுக்கலாம் என்று சட்டம் இருக்கிறது. பிறக்கும்போதும் கொண்டுவருவதில்லை; பிறந்து மண்மேல் இறக்கும்போதும் கொண்டு போவதில்லை. அப்படியிருக்கும்போது காம்பன்சேஷன் பணம் கொடுப்பதே பெரிய சலுகை. அவர்கள் ஏற்கெனவே பணக்காரர்கள். அவர்களுக்கு இன்னும் வட்டி பணம்

கொடுக்கவேண்டிய அவசியம் என்ன என்று தெரியவில்லை. இந்த வட்டி விகிதத்தைப்பற்றியுள்ள ப்ரோவிஷனையே எடுத்துவிட வேண்டும்.

இதிலே எதோ பெண்களுக்கு சம உரிமை கொடுத்து அவர்களுக்கு நிலங்களில் பங்கு கொடுக்கவேண்டுமென்று சொல்லப் பட்டது. நான் பெண்ணாக இருந்தாலும் அவர்களுக்கு தனியாக ஸ்ரீதனத்திற்கென்று நிலங்களை ஒதுக்கவேண்டாம். நியாயமான அடிப்படையில் ஒதுக்கினால் அவர்களுக்கு அதுவே போதுமானது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே இதை நல்லமுறையில் பரிசிலனை செய்து இந்தச் சட்டத்தைத் திருத்துவார்கள் என்று நம்புகிறேன்.

தவிர புறம்போக்கு நிலங்களை எடுத்துக்கொண்டால் நான் இதைப்பற்றி இந்த மாதம் 17-ம் தேதியிலிருந்து கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டும்கூட ஒன்றும் பயன்படவில்லை. புறம்போக்கு நிலங்களை நிலம் இல்லாத எழை விவசாயிகளுக்கும், நிலம் இல்லாத எழை ஹரிஜனங்களுக்கும் உடனடியாகக் கொடுப்பதற்கு ஆந்திரா மாகாணத்தில் சட்டம் இயற்றியுள்ளார்கள். என்னுடைய தொகுதியில் எழை விவசாயிகள் புறம்போக்கு நிலத்தில் பயிரிட்டு வந்தார்கள். ஆனால் நல்ல பயிர் காலத்தில் 1-½ மாத நெல் பயிரை அழித்துவிட்டார்கள். அந்த எழை விவசாயிகள் கடன் பட்டு விவசாயம் செய்திருந்தும் தற்சமயம் பட்ட கடனை திருப்பிக்கொடுக்க வழியில்லாமல் தவித்துக் கொண்டிருக்கின்றார்கள். எனவே கனம் அமைச்சர் அவர்கள் சற்று கருணை கூர்ந்து மறுபடியும் இம்முறை மட்டும் விவசாயம் செய்ய அனுமதி கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொண்டு உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

* **Sri M. KULANDAISAMI GOUNDER**: கனம் சட்டமன்ற உதவி தலைவர் அவர்களே, இந்த உச்ச வரம்பு மசோதாவை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். என்னுடைய தொகுதியில் ஓமலூர் தாலூக்காவில் 5 எக்கர் நிலங்கள் மலைஜாதி மக்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. மற்ற எழை மக்களும் அந்த நிலத்தை சாகுபடி செய்யவேண்டுமென்று வருகிறார்கள். மலைஜாதி மக்கள் இந்த நிலம் எங்களுக்குத்தான் ஒதுக்கப்பட்டிருக்கிறதென்று சொன்னபோது அது உங்களுக்கு அல்ல எங்களுக்குத்தான் பாத்தியதை உண்டு என்று பிடிவாதம் செய்கிறார்கள். இதனால் அவர்கள் கலக்டெரிடத்திலும், மந்திரிகளிடத்திலும், எம்.எல்.எக்களிடத்திலும் முறையிட்டிருக்கிறார்கள். ஆகையால் அங்கே ஒதுக்கப்பட்ட நிலம் மலைஜாதி மக்களுக்கு ஒதுக்கப் பட்டதா அல்லது எழை மக்களுக்கு ஒதுக்கப்பட்டதா அல்லது மலைஜாதி மக்களுக்கும், எழை மக்களுக்கும்—எல்லோருக்கும் ஒதுக்கப்பட்டதா என்று சபாநாயகர் அவர்களுக்கும், மந்திரி அவர்களுக்கும் சொல்ல விரும்புகிறேன். இதைத் தவிர சாய்வான

நிலங்கள் ஒரு ஆயிரம் எக்கர் அந்த ஊரிலே இருக்கின்றன. அந்த நிலங்களை எல்லா எழை மக்களுக்கும் பட்டா செய்து விட்டால் விவசாயம் செய்து முன்னுக்கு வருவார்கள் என்று சொல்ல விரும்புகிறேன். ஒரு இடத்தில் 1917-ல் ஒரு ஏரி வெட்டியிருக்கிறார்கள். அந்த ஏரிக் கரையில் 2,000 எக்கர் நிலங்கள் காலியாக இருக்கின்றன. பக்கத்தில் நான்கு ஊர் ஜனங்கள் இருக்கிறார்கள். பெரும்பாலும் அங்குள்ள ஜனங்கள் விடு இல்லாமலும், நிலம் இல்லாமலும் ஊர் ஊர் ஆகப் போய் கூலி வேலை செய்துகொண்டு வருகிறார்கள். சேலத்தில் ஒரு எரி இருக்கிறது. குடிதண்ணீருக்கு மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இப்பொழுது எரி வரண்டு கிடக்கிறது. மேட்டூர் அணைக் கட்டு தண்ணீர் 4, 5 வருஷத்திற்கு முன்பு உபயோகப்படுத்தியிருக்கிறார்கள். பனைமரத்துப்பட்டியில் 500 எக்கருக்கு முனிசிபாலிடி நிலம் இருக்கிறது.

அங்கு இப்பொழுது ஆறு மாத காலமாக ஆடு, மாடு, எருமை இவை மேய்ந்துகொண்டு வருகிறது. இந்த 1,500 எக்கர் நிலத்தை எழை மக்களுக்கு கொடுத்தால் அவர்கள் அங்கு நல்லமுறையில் விவசாயம் செய்ய முடியும். அப்படி நன்கு விவசாயம் செய்து அவர்கள் முன்னுக்கு வர வழியிருக்கிறது. இந்த பனைமரத்துப் பட்டி எரிக்கு வரும் தண்ணீர், சோழமலை, போதமலை, கிடமலை போன்ற மலைகளிலிருந்துதான் பனைமரத்துப்பட்டி எரிக்கு தண்ணீர் வருகிறது. மள்ளூர் எரிக்கும் அங்கிருந்துதான் தண்ணீர் வருகிறது. மள்ளூர் எரிக்கு வரும் தண்ணீரை பனை மரத்துப்பட்டிக்கு திருப்பி விட்டார்கள். மள்ளூர் எரி வறண்டு போய் விட்டது. அதன் கீழ் இருக்கக்கூடிய எழு ஊர்கள் தண்ணீர் இன்றி அங்குள்ள மக்கள் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் வானத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த ஏரியின் கதவை மூடியிருக்கிறார்கள். மழை பெய்யும்போது கதவை எடுத்து விட்டால் பனைமரத்துப்பட்டிக்கும், மள்ளூருக்கும் பாதி தண்ணீர் வந்தால் கிணறுகளில் தண்ணீர் வந்து அவர்கள் விவசாயம் செய்ய முடியுமென்று சொல்லிக்கொண்டு அமைச்சர்களுக்கும், தலைவர் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : Hon. Member Sri A. V. P. Asaithambi may now speak. The hon. Member will take seven minutes.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் இந்த நில உச்சவரம்பு மசோதாவிலுள்ள குறைகளை சுட்டிக்காட்டி இரண்டொரு வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இந்த மசோதாவின் காரணமாக ஏற்கனவே இந்த நிலங்கள் எல்லாம் பிரிக்கப்பட்டுவிட்டதாக அமைச்சரவையில் அறிவிக்கப்பட்டது. இந்த மசோதாவின் நோக்கம் ஓரளவு நிறைவேற்றியிருப்பது நல்லதுதானே என்ற கருத்தை தெரிவிக்கிறார்கள். இந்த மசோதாவின் நோக்கம் நிலம்

பிரிக்கப்படுமென்பது மட்டுமாக இருக்குமென்று சொன்னால் அது இந்த நாட்டிற்கு நன்மை பயப்பதாக இருக்கமுடியாது. உழுகிறவர்களுக்கு நிலம் சொந்தமாகவேண்டுமென்ற அடிப்படையில் இந்த மசோதா தயாரிக்கப்படுவதாகயிருந்தால்தான் அதில் ஓரளவு பலன் இருக்கமுடியும். அந்த முறையில் பார்க்கிறபோது உழுகிறவர்களுக்கு நிலம் சொந்தமாகும் அளவிற்கு இந்த மசோதாவில் வழிவகை செய்யப்படவில்லை. அதுமட்டுமல்லாது, இந்த மசோதாவின் நோக்கம் நிலம் பிரித்து அளிக்கப்பட வேண்டுமென்று சொல்லப்படுகிறது உண்மையானால் அது கூட நிறைவேற்றப் படாதபடி பல அம்சங்கள், சில சலுகைகள் இதில் இருப்பதை நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இதிலே விதிவிலக்குகள் பல வகைகளில் அளிக்கப்பட்டிருக்கின்றன. தேயிலை, பாக்கு, ரப்பர் போன்ற பொருள்கள் விளையும் நிலங்களுக்கு விதிவிலக்கு அளிக்கப் படுகிறதென்று சொன்னால் ஓரளவு குறைந்த விஸ்தீர்ணம் உள்ள நிலப்பகுதிகளில் இவையெல்லாம் சாகுபடி செய்யப்படுவது கஷ்ட மென்று சொன்னால் அவைகளுக்கு விதிவிலக்கு அளிக்கப்படுவதில் அர்த்தமிருக்கலாம். அதில்லாதபோது இவைகளுக்கு விதிவிலக்கு அளிப்பது என்று சொன்னால் நிலம் வேறு பக்கத்தில் குவிவதற்கு வழிவகை செய்வதாகயிருக்கும் என்பதை சுட்டிக்காட்ட விரும்பு கிறேன். இரண்டாவதாக, கனம் பொன்னம்மாள் அவர்கள் பேசும் போது, எதிர்கட்சி அங்கத்தினர்கள் இந்த மசோதாவைத் தாக்கிப் பேசுவது யானை குளிக்கப் போய் சேற்றைப் பூசிக்கொண்ட கதை போல் இருப்பதாகச் சொன்னார்கள். ஆனால் இந்த மசோதாவைக் கொண்டுவந்த முறையில், இந்த மசோதா கொண்டுவந்ததின் பலனை யானை குளிக்கப் போய் சேற்றைப் பூசிக்கொண்ட நிலை அரசாங்கத்திற்கு வந்துவிடுமோ என்ற நிலையில் நான் மிக மிக அஞ்சுகிறேன். காரணம், மடங்களுக்கும், கோவில்களுக்கும் விதி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. உண்மையிலே நிலம் பிரித்துக் கொடுக்கப்படவேண்டுமென்பதுதான் இந்த மசோதாவின் நோக்கம் என்று இருக்குமானால், மடங்களுக்கும் கோவில்களுக்கும் விதிவிலக்கு அளிக்கப்படுமென்ற நிலை சட்டத்தில் ஒரு பக்கத்தில் இருக்குமானால், பிரிக்கப்பட்ட நிலங்கள் எல்லாம் இன்னொரு பகுதியில் குவிவதற்கு இடம் ஏற்பட்டு விடும். அதனால் மடங் களின் பலம் நாளுக்குநாள் அதிகரித்துவிடும். எதிர்காலத்தில் மடாதிபதிகளின் ஆசிர்வாதம் பெற்றவர்கள்தான் இந்த மன்றத்தில் வந்து அமர முடியும் என்ற நிலை இந்த நாட்டில் வந்து விடும். இந்த மசோதாவின்மீது பேசுகிறபோது ஆளும் கட்சியைச் சார்ந்தவர் கள் கூட, மடாதிபதிகளின் பகுதிகளிலிருந்து வந்திருப்பவர்கள், இந்த மசோதாவில் மடங்களுக்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டி ருப்பதை வன்மையாகக் கண்டித்தார்கள். அப்படி அவர்கள் வன்மையாகக் கண்டிப்பதற்குக் காரணம், ஒவ்வொரு தேர்தலின் போதும் ஒவ்வொரு பிரச்னையின்போதும் இந்த மடாதிபதிகளுக்கு மண்டியிட்டால் தவிர அவர்களை எதிர்த்து சமாளிக்க வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். இந்நிலையில் இருக்கும்போது மடங்

களுக்கு விதிவிலக்கு அளிக்கப்படுமென்ற நிலை இருக்குமென்று சொன்னால் நாளுக்குநாள் நிலங்களும், மற்றவைகளும் மடங்களுக்கு குவிகிறபோது அவர்கள் கரம் நிச்சயமாக வலுப்படுத்தப்படும். மேல் நாட்டு சரித்திரங்களை எடுத்துப் பார்த்தால் மடாதிபதிகளுக்கும், மன்னர்களுக்கும் அடிக்கடி சண்டை மூண்டு அதில் மன்னர்கள் தோல்வி அடையவும், மடாதிபதிகளின் கைப்பொம்மைகளாக மன்னர்கள் இருந்ததையும் நாம் சரித்திரத்தில் பார்க்கிறோம். ஆனால் இந்த நாட்டைப் பொறுத்தமட்டில் அந்த நிலை இன்னும் பகிரங்கமாக வரவில்லையென்றாலும் இந்த மசோதா காரணமாக எதிர்காலத்தில் அமையவும், மடாதிபதிகளின் கையில் ஆடும் பொம்மையாக அரசாங்கம் வந்துவிடக்கூடாதென்பதை இந்த மசோதாவைக் கொண்டுவந்து நிறைவேற்றக்கூடியவர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும். அந்த அளவில் நிலங்கள் அவர்கள் கையில் போய் குவிந்துவிடும். கிருஸ்தவ மடாதிபதிகளை எடுத்துக் கொண்டால் அவர்கள் ஓரளவு சமுதாயத்திற்கும், நாட்டிற்கும் நன்மை செய்தவர்களாவார்கள். ஆதி-திராவிட பெருங்குடி மக்களுக்கு ஓரளவிற்கு கல்வி அறிவைக் கொடுத்து அவர்களை நல்ல நிலைமைக்கு ஆளாக்கி சமுதாயத்திலிருந்து தீண்டாமையை ஒழித்த பெருமை கிருஸ்தவ மடாதிபதிகளுக்குச் சேரும் என்பதை அமைச்சர் கக்கன் அவர்கள்கூட ஒப்புக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன். அந்தளவு கிருஸ்தவ மடாதிபதிகள் கல்வி விஷயங்களிலும், வைத்திய விஷயங்களிலும், மற்ற விஷயங்களிலும் சேவை செய்தார்கள், செய்கிறார்கள், நிச்சயமாக செய்து கொண்டும் இருப்பார்கள். ஆனால் நம்முடைய மடாதிபதிகள் மதத்தின் பேராலும், கடவுளின் பேராலும் அவர்களையும், அவர்களைச் சேர்ந்தவர்களையும் வளர்த்துக்கொள்வதற்கு என்னென்ன வழிமுறைகள் உண்டோ அந்த வழிமுறைகளைத்தான் அந்த நாளிலிருந்து இந்த நாள் வரை அவர்கள் கடைபிடித்து வருகிறார்கள். என் கட்சிக் கொள்கைப்படி சொல்லவேண்டுமென்று சொன்னால் மடாதிபதிகள் ஒழித்துக் கட்டப்படவேண்டும். மடாதிபதிகளை ஒழித்துக் கட்டவேண்டுமென்ற நிலை இருக்கும்போது மடாதிபதிகளின் கரங்களை வலுப்படுத்தக்கூடிய அளவிற்கு இந்த மசோதாவில் இடம் அளிப்பது மிக மிக தவறாகும். அது எதிர்காலத்தில் தீங்கு பயப்பதாகும். மடாதிபதிகள் நிலத்தை வாங்குவதைத் தடுத்துவிடலாமே என்று சொன்னால் அதிலும் ஒரு ஆபத்து வரும். இனமாக நாங்கள் பெறுகிறோம் என்று சொல்லி தெரியாதபடி பணத்தை கொடுக்கக்கூடிய அளவு சில ஏற்பாடுகள் செய்வார்கள். இதனால் பொருளாதார, பணப்புழக்கத்தையும் பாதிக்கக்கூடிய அளவில் மடாதிபதிகள் செய்ய நேரிடும். ஆகவே மடாதிபதிகளின் பலத்தைக் குறைப்பதற்கு இந்த மசோதாவில் இடமில்லை. மாறாக அவர்கள் கரத்தை பலப்படுத்துவதற்குத்தான் இதில் இடமிருக்கிறது. எனவே அரசியல் சட்டத்தைத் திருத்தியாவது மடங்களுக்கு நிலம் தேவையில்லையென்ற அளவிற்கு அதைக் கட்டுப்படுத்தி, அறநிலயப் பாதுகாப்பு மசோதா போல் இவைகளை

உறுதியாக அரசாங்கம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு மடங்களுக்கு விதிவிலக்கு அளிப்பதை நீக்கி திருத்தி இந்த மசோதாவை இங்கு நிறைவேற்ற முயற்சிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

10-30 a.m.

**SRI N. K. PALANISAMI GOUNDER :** கனம் தலைவர் அவர்களே, இன்றைய தினம், சென்னை சர்க்கார் கொண்டு வந்திருக்கும் இந்த நில சீர்திருத்த மசோதாவை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன், வரவேற்கிறேன். மற்ற ராஜ்யங்களில் எல்லாம் கொண்டு வந்ததின் பின்னால்தான் நம் நாட்டில் கொண்டு வரப்பட்டது என்று பலர் சொன்னார்கள். முக்கியமாக நமது ராஜ்யத்தில் 100-க்கு 85 பேர்கள் நிலங்களில் விவசாயம் செய்து கொண்டிருக்கிறார்கள். அதன் காரணமாக இன்றையதினம் இம்மாதிரியாக ஒரு சட்டம் கொண்டு வரும்போது பொது மக்களுடைய அபிப்பிராயம் என்ன என்பதை ஆராய்ந்து அதன் பின்னால்தான் சட்டம் கொண்டுவரவேண்டும் என்பதை இந்த அரசாங்கம் உணர்ந்திருக்கிறது. இரண்டு ஆண்டுகளாகவே இவ்விதமான ஒரு சட்டம் கொண்டுவரப்படும் என்று அரசாங்கம் சொல்லியிருந்தது. இன்றையதினம் கொண்டு வராமல் முன்னாலேயே கொண்டு வந்திருந்தால், அன்றையதினம் மக்களுடைய அதிருப்தியை இந்த அரசாங்கம் அடைந்திருக்கும். நிலமுடையவர்களும் பெரிய ஏமாற்றம் அடைந்திருப்பார்கள். சர்க்கார் இன்றையதினம் அதிகமான அளவில் நிலத்தை கொடுத்துவிட்டார்கள் என்று எதிர்கட்சிக்காரர்கள் பலர் சொன்னார்கள். ஆனால் நல்ல முறையில் விவசாயம் செய்கின்றவர்கள் ஐந்து எக்கர், 10 எக்கர் என்று இருந்தால் அவர்கள் நல்ல முறையில் விவசாயம் செய்ய முடியாது. முக்கியமாக விவசாயம் என்று சொல்லும்போது, குறைந்தது 50 எக்கர் இருந்தால் கூட நல்ல முறையில் விவசாயம் செய்ய முடியாது. இன்றையதினம் விவசாயம் செய்து கொண்டிருப்பது என்று சொன்னால், நாட்டில் வேறு வகையில் வியாபாரம் செய்வது கைத்தொழில்கள் நடத்துவது போன்று ஆகிவிட்டது. ஆரம்பத்தில் நல்ல கொள்முதல் போட்டு, பெரிய அளவில் நல்ல உரங்கள் எல்லாம் போட்டுதான் நல்ல முறையில் விவசாயம் செய்ய முடியும். இன்றையதினம் நல்ல முறையில் விவசாயம் செய்கின்ற ஒருவருக்கு 25 ஆயிரம் ரூபாய் வருமானம் வருகிறது என்று சொன்னால் குறைந்தது 15 ஆயிரம் ரூபாய் ஆரம்பத்தில் செலவு செய்யவேண்டும். சாதாரணமாக விவசாயம் என்பது மற்ற தொழில்களை போன்றது அல்ல. பணம் உடையவர்கள் எப்போது வேண்டுமானாலும் வியாபாரம் செய்யலாம். ஆனால் விவசாயத்தில் நல்ல கவனம் செலுத்தி காலாகாலத்தில் உரங்களைப்போட்டு விவசாயம் செய்தாலும் கூட சில நேரங்களில் விவசாயம் சீரழிந்து போகிறது. சில நேரங்களில் விவசாயத்தில் பலவிதமான நோய்கள் வந்து விடுகின்றன. இவ்விதம் ஏதாவது ஏற்பட்டுவிட்டால் 100-க்கு 50 சதமானம் பலன் கிடைப்பதே கஷ்டமாகிவிடுகிறது. கோயம்புத்தூர் ஜில்லாவை எடுத்துக்கொண்டால் சாதாரணமாக 100

ஏக்கர் அல்லது 200 ஏக்கர் இருந்தால்தான் நல்ல முறையில் விவசாயம் செய்து வாழ முடியும். இன்றையதினம் நாட்டில் தாழ்த்தப்பட்ட மக்கள் என்று சொன்னல் முன்பு ஹரிஜனங்களைச் சொல்லிக்கொண்டிருந்தாலும், இப்போது, விவசாயம் செய்கின்ற வர்களைத்தான் தாழ்த்தப்பட்ட மக்கள் என்று சொல்லவேண்டும். இன்றையதினம் பல முறையில் அரசாங்கம் அவர்களுக்கு உதவி செய்யவேண்டும். இந்த முறையில் பார்க்கும்போது, இன்றைய தினம் கொடுத்திருக்கும் 30 ஏக்கர் என்பது குறைவு என்றுதான் சொல்லவேண்டும். சகோதரி பொன்னம்மாள் அவர்கள் கூறினது போன்று இந்த 30 ஏக்கர் இனிமேல் வருகின்ற பிற்கால சந்ததிகளுக்கு வரும்போது இரண்டு ஏக்கர் மூன்று ஏக்கர் என்று பிரிந்து போய்விடும். அதோடு முக்கியமாக பெண்களுக்கு நல்ல முறையில் சொத்து இருந்தால்தான் நல்ல கணவனைத் தேர்ந்தெடுக்க முடியும். நிறைய சொத்து கொடுப்பது பெண்களுக்கு மிகவும் அவசியம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்தபடியாக, இன்றையதினம், காங்கேயம் கால்நடைகளை எடுத்துக்கொண்டால், கோயம்புத்தூர் ஜில்லாவில் இதற்காக முக்கிய கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இந்த கால்நடைகள் விவசாயத்திற்கு மட்டும் அல்ல, மனித உணவுக்கு மிகவும் முக்கியமாக இருக்கின்ற பால் உணவை கொடுப்பதற்கும் உதவுகிறது. ஆகவே இதற்காக அதிகப்படியான அளவில் மேய்ச்சல் காடுகளை கொடுப்பதற்கு சர்க்கார் மேலும் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சென்ற ஆண்டில் சர்க்கார் விவசாய வருமான வரி கொண்டுவந்ததின் காரணமாக விவசாயிகளுக்கு பலவிதமான இடைஞ்சல்கள் ஏற்பட்டன. இதையும் சர்க்கார் கவனித்துப் பார்க்கவேண்டும். அதோடு விவசாயிகளுக்கு பல இடங்களில் ரூரல் பாங்குகள் மூலமாக கடன் கொடுக்கப்படும் என்றிருக்கிறது. இதில் போதிய அளவு கடன் கொடுப்பதில்லை, அதனல் பலவிதமான இடைஞ்சல்கள் ஏற்படுகின்றன. இதை மாற்றி நிலத்தினுடைய தன்மைக்கு ஏற்றவாறு, 100-க்கு 75 பங்காவது மதிப்புக்கு கடன் கொடுப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன். அது மட்டுமல்ல, ரூரல் பாங்கிலிருந்து பல வகைகளில் கடன் கொடுக்கப்பட்டுவருகிறது. இதில் முன்பு சொல்வது மாதிரி, கரும்புத் தோட்டம், தென்னந் தோப்புகள் முதலியவைகளுக்கும் கடன் கொடுக்கின்ற முறையைப் பற்றியும் அரசாங்கம் யோசித்துப் பார்க்கவேண்டும். மடாதிபதிகளைப்பற்றி சொன்னர்கள், அவர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் நிலங்களைப் பற்றியும் சொன்னர்கள். அவர்களுக்கு இப்போது நிலங்கள் கொடுத்திருந்தாலும், அதை பின்னல் காலாகாலத்தில் எடுத்து நல்ல முறையில், மன்னர்களுடைய சொத்துக்களை எல்லாம் எடுத்ததுபோல் எடுத்து, வழங்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இதில் பேசுவதற்கு இடம் தந்ததற்கு என் நன்றியை தெரிவித்துக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

*SRI A. NESAMONY: Mr Deputy Speaker, Sir, while welcoming this Bill, I wish to refer to three clauses of the Bill which refer to the Transferred Territory and make some comments upon those clauses. They are clauses 56, 57 and 58 of the Bill. Clause 56 indicates that there must be a resurvey of lands in the Transferred Territory. Clause 57 states that there must be a resettlement of the ryotwari lands of the whole area. Clause 58 relates to the appointment of Settlement Officers.

Now, while considering Clause 57, probably the Select Committee never knew that there was in existence in the Transferred Territory a statute which is known as 'Oodukur Proclamation' by which Oodukur holdings which are holdings held jointly for generations together, are being divided and individual pattas are being given. After the integration, the working of that Act has been kept in abeyance. The work has not yet been completed. Probably if the Oodukur Proclamation had been carried out fully, there would have been no necessity for Clause 57 in this Bill. Again, in the Oodukur Proclamation there is a provision for recourse to civil courts to set aside any order of the Oodukur Officer. Here in Clause 57 (3) there is a total prohibition. It says—

> 'Neither the settlement notification nor any order passed in pursuance thereof shall be liable to be questioned in any court of law.'

There does not seem to be any provision in the clause itself for the settlement of disputed claims to title to property which is a thing very common in the Transferred area. There has been no mutation of names for generations together and that has added to the difficulty of these Oodukur holdings. So, while considering Clause 57, the Select Committee has ignored the existence of the Oodukur Proclamation. If only that proclamation had been implemented, there would have been no necessity for resettlement to be carried out in that area.

Now, a perusal of the whole Bill wuold go to show that the Government seem to be fighting shy of the civil courts. At every stage, there is a prohibition from entertainment of suits in Civil courts. Apart from the general prohibition contained in Clause 104, according to Clause 34, the decision of the Land Board is final. So also in the case of Clause 46, the decision of the Sugar Factory Board is final. In Clause 11 (3) also there is provision only for a suit in the Land Tribunal and not in the Civil Court. This is a Bill dealing with the civil rights to property and titles, liability, inheritance, extent of the area and the land to be brought under the ceiling; they are all brought under the purview of this Bill. Unless civil rights are allowed to be agitated in Civil Courts I believe that excessive rights conferred on several authorities under this Bill will be still violated and there will be no remedy for the aggrieved people to take up the challenge in a Civil Court of Law. Civil rights have to be settled finally by the Civil Courts and the

30th August 1961] [Sri A. Nesamony]

prohibition for taking these matters to Civil Court is a restrictive one and the Government will have to re-examine this question again. There is only one second appeal and that appeal is to the High Court over the decision of the Land Tribunal. There is only one officer who is competent to decide on the question of title to the property and that is the Authorised Officer. But for the ryotwari settlement under Clause 57 no appeal is provided for. The Land Commissioner may revise the order of the Settlement Officer. There is no appeal but only revision. I think those restrictive clauses which restrict the right of the citizen to have recourse to Civil Court have to be re-examined. That right has to be conferred on Civil Courts and not on individuals and the decision of individuals should not be made final in all these matters. There are a series of authorities created under this Bill, viz., the Authorised Officer, Land Board, Land Tribunal, Sugar Factory Board, and above all, the Land Commissioner. A perusal of the provisions of the Bill would show that the respective rights and duties of these officers have not been clearly defined. In the absence of a clear definition of their powers and functions, I am afraid that there would be a little bit of overlaping of functions. That has to be made clear in the Bill or at least the Government must take powers under the rule-making powers, which they have not yet taken so far, to define clearly the duties and functions of these officers and authorities.

I welcome the provision under Clause 70 exempting lands held by religious associations and organisations from the purview of this Bill. Hon. Members may be interested in the evidence that has been given so far as Church of South India is concerned. The Church of South India is spreading over the four Southern States of India, viz., Kerala, Karnataka, Andhra and Tamilnad and even portions of Ceylon. The properties are owned by Foreign Missions or Corporations registered in foreign countries. They are now taking steps to transfer all those properties to an Indian Trust or Association in India. As soon as steps were being taken to transfer some properties to the Indian Trust, because of the initial provision in the Bill proposing a ceiling of 200 acres for lands owned by Religious Trusts or Association, the foreign bodies refused to transfer property to the Indian Trust or Association that has been formed in India. After this exemption has been allowed, the foreign corporations are taking steps to transfer the properties to the Church of South India. That would enable the Christian Missions functioning in this part of India in the South to function more effectively with the properties held by them. I thank the hon. Member Sri Asaithambi for the tribute he paid to the work of Christian Missions in the South. They can do the work more efficiently and independently when the right to property is vested in them. This clause, viz., Clause 70 will enable the foreign missions to transfer the properties to the Indian Association more effectively. With these observations I commend this Bill for the acceptance of the House.

[30th August 1961

* **SRI K. ANBAZHAGAN :** சட்டமன்றத் தலைவர் அவர்களே, நிலச் சீர்திருத்தத்தை நிறைவேற்றுவதற்காக என்று கூறப்பட்டு இங்கே கொண்டுவரப்பட்டிருக்கிற உச்சவரம்புச் சட்டம் உண்மையாகவே எந்தக் குறிக்கோளுக்காகக் கொண்டுவரப் படுவதாக இதுவரையில் கூறப்பட்டு வந்ததோ அந்தக் குறிக் கோளைக் கைவிட்டு, அந்தக் குறிக்கோளை நிறைவேற்றுவதற்கு மாறாக, உண்மையான உச்சவரம்புச் சட்டமாக இல்லாமல் மிராசு தார் பாதுகாப்புச் சட்டமாக இங்கே கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று வருத்தமுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். குழந்தை பிறக்கும் என்று எதிர்பார்த்திருக்கிற நேரத்தில், சேய் பிறந்தது என்றாலும் செத்துப் பிறந்தது என்ற முறையில், மிக அழகான பிள்ளையார் பிடிக்க நினைத்த நல்ல சைவ உள்ளம் படைத்தவர் மனம் நோக பிள்ளையார் பிடிக்க அது குரங்காக முடிந்தது போல இருக்கிறது இன்றையதினம் வந்திருக்கிற சட்டம். எந்தெந்த லட்சியங்கள் இன்றையதினம் ஆட்சிப் பீடத்தில் இருக்கின்றவர் களால் எடுத்துக் கூறப்பட்டதோ, அதற்கு மாறாக, சொன்ன கருத் துக்களை கைவிட்டு விட்டு, சொன்ன வழியில் சில அடையாளங்களை மட்டும் காட்டி, இதைக்கொண்டு வந்திருக்கிறார்கள். அமைச்சர் மாணிக்கவேலர் அவர்கள் இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவதற் கான காரணங்களை எடுத்துச் சொன்ன நேரத்தில் பல்வேறு குழுக் களும் குமரப்பா கமிட்டியினரும் சொன்ன கருத்துக்களையும், அதன் பிறகு நிலச் சீர்த்திருத்தம் குறித்து திட்டக் குழுவினர் எடுத்துச் சொன்னதையும் காட்டி, இதன் நோக்கங்கள் என்று,

(1) No place for intermediaries,

(2) Land must belong to the tiller,

(3) Development of farmer's personality,

(4) No scope for exploitation of one class by another,

(5) Aim at maximum efficiency of production.

ஆகிய இந்த கருத்துக்களையும் அதையொட்டி வேறு சில கருத்துக் களையும் எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இதில் மிகவும் முக்கியமான கருத்து, **"Land must belong to the tiller and no place for intermediaries"** என்பவையாகும்—உழுபவனுக்கு நிலம் சொந்தமாக்கப்பட வேண்டும், தரகர்களுக்கு இடமில்லை என்பதாகும். நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் தாருங்கள் என்று சிலர் சொல்லுகிறார்கள் என்பதை நிலம் இல்லாத காரணத் தினால்தான் வற்புறுத்துகிறார்கள் என்று சிலர் சொன்னார்கள். நான்கூட நிலம் இல்லாதவன்தான், அதனால் நிலம் பெற உரிமை பெற்றவனாகமாட்டேன். ஆனால் உழுகின்றவன் தனக்கென நிலம் இல்லாது இருந்தாலும், அவன் நிலத்தை உழுகின்றான், மேலும் ஒரு காலத்தில் நிலத்தைப் பெற்றிருந்தான், பெற்றிருந்ததை இழந்துவிட்டான். எனவே மறுபடியும் அளிக்கப்பட வேண்டும் **என்ற** காரணத்தினால், உழுபவனுக்கு நிலம் சொந்தம் என்ற

கொள்கை உத்தமர் காந்தியடிகள் காலம் முதலாக, முக்கியமாக ஆளும் கட்சியினராலும் எல்லா முற்போக்குக் கட்சியினராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனாலும்கூட இன்றையதினம் முதலமைச்சராக இருக்கிறவர் சில ஆண்டுகளுக்கு முன் இதைக் கேலி செய்துதான் பேசிக்கொண்டிருந்தார். "என்னய்யா? உழுபவனுக்கு நிலம் சொந்தம் என்றால், ஓட்டுகின்றவனுக்கு கார் சொந்தமா? டிரைவருக்கு ரயில் சொந்தமா? சமைக்கிறவனுக்கு சாப்பாடு சொந்தமா?" என்று கேட்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட திறமையான முதலமைச்சர் இருக்கிற காரணத்தினால்தான் போலும் உழுபவனுக்கு நிலம் சொந்தமாகவில்லை, பட்டா அவன் கைக்கு வரவில்லை என்பதுகூட அல்ல, அவனுக்குச் சொந்தம் இருக்கிறது என்ற உணர்ச்சியை ஏற்படுத்துவதற்கான வழிவகைகளைகூட இன்றையதினம் இந்தச் சட்டம் செய்யவில்லை என்று வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன். உழுபவனுக்கு நிலம் சொந்தமாக்கப்பட வேண்டுமானால் முக்கியமாகக் கருதப்பட வேண்டியது, ஏராளமான மிச்ச நிலம் அரசாங்கத்திற்குக் கிடைத்து, அரசாங்கத்தால் கைக்கொள்ளப்பட்டு, நிலம் இல்லாத ஏழை விவசாயிகளுக்கு அந்த நிலத்தில் உரிமை உண்டு என்பதை கூட்டுறவுப் பண்ணை மூலமாக இருந்தாலும் சரிதான், இருக்கக் கூடிய நிலத்தின் அளவு கொஞ்சமாக இருப்பதால் தலைக்கு ஒரு காணி நிலம் என்று சிறிதளவு நிலம் கொடுத்திருந்தாலும் சரிதான், அவர்களுக்குப் பட்டா உரிமை வழங்கப்பட்டிருக்க வேண்டும். நாட்டில் இருக்கும் நிலம் பற்றிய புள்ளிவிவரம் தரும் நேரத்தில், சென்னை மாநிலத்தில், தமிழ்நாட்டில் சிறு நிலச்சுவாந்தார்கள் ஏறத்தாழ 110 லட்சம் பேர்கள், விவசாயிகள்—அதாவது டெனண்ட்ஸ்—ஏறத்தாழ 40 லட்சம் பேர்கள், உழுபவர்கள்—லேபரர்ஸ்—60 லட்சம் பேர்கள், அதேபோல நான்—கல்ட்டிவேட்டிங் என்ற வகையிலே—நிலத்தை ஏதோ பயிர்ச் செலவு செய்யக்கூடிய நிலச்சுவாந்தார்கள் 7 லட்சம் பேர்கள் என்று குறிப்புத் தரப்பட்டிருக்கிறது. அதற்கான அடிப்படையான காரணம், தமிழ்நாட்டின் நிலப் பரப்பு ஏறத்தாழ 50,000 சதுர மைல், மக்கள் தொகை ஏறத்தாழ 3½ கோடி, அதில் 80 சதவீதத்தினர் விவசாயத்தை நம்பி வாழுகின்றார்கள் என்ற சூழ்நிலை காரணமாக ஏராளமான மிச்ச நிலம் எளிதாகக் கிடைப்பதற்கில்லை. நிலத்தில் உரிமை கொண்டவர்கள் யார் யாரோ இருக்கிறார்கள். யார் யாரோ உரிமை கொண்டாடும்போது யாருக்குச் சேரவேண்டும் என்று எண்ணிப் பார்க்கவேண்டும். அவர்கள் யாராக இருக்க வேண்டுமென்றால் யார் அதில் பாடுபட்டு, பண்படுத்தி, உணவு உற்பத்தி செய்கிறார்களோ அவர்களுக்குத்தான் உரிமை இருக்கவேண்டும். வள்ளுவர் பெருந்தகை உழவை—இன்றையதினம் ஏற்பட்டிருக்கிற நிலைமையை வைத்து அல்ல—உழவின் சிறப்பை உணர்ந்த காரணத்தினால் அந்நாளிலேயே

'செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்
தில்லாளின் ஊடி விடும்'.

என்று கூறினர். "கிழவன் செல்லான் இருப்பின்", அதாவது ஒருவன் தன் நிலத்தை தானே அன்றாடம் சென்று பார்த்து கவனிக்காவிட்டால் அது அவனுக்கு பயன் தராது, பிறருக்கும் பயன் தராது, அவனுடைய அருமையான மனைவிபோல தன்னுள்ளே வெறுத்து பின்னவனோடு ஊடிவிடும், விளைச்சல் தராது என்பதே கருத்து. அதனால்தான் உழவுக்குப் பெருமையே உழுபவனுக்கு நிலம் சொந்தமாக இருப்பதுதான். இண்டர்மீடியரீஸ் ஆக இருந்து இடைக் காலத்தில் எப்படியோ சலுகைகளைப் பெற்று ஏராளமான ஏக்கர்களுக்குச் சொந்தக்காரர்கள் என்று பட்டா கட்டிக்கொண்டவர்களுக்கு, ஆயிரக்கணக்கான ஏழைகளை உழ வைத்து உறிஞ்ச வாய்ப்பைத் தேடிக்கொண்டவர்களுக்கு, ஆயிரக் கணக்கான ஆண்டுகள் இல்லாவிட்டாலும் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக நிலத்தின் சாற்றை உறிஞ்சிப் பலனை எடுத்துக் கொண்டவர்களுக்கு, மறுபடியும் சலுகை காட்டும் முறையில் இன்றையதினம் 30 ஏக்கர் உச்சவரம்பு என்று குறிப்பிட்டு, அதுவும் ஒரு குடும்பத்திற்கு என்று குறிப்பிட்டு, நிலத்தை வரைமுறை செய்யும் முறையிலேயே தவறிழைத்து, மேலும் ஒரு குடும்பத்தில் ஐந்து பேர்களுக்கு மேல் இருந்தால், அந்த நபர் ஒன்றுக்கு ஐந்து ஏக்கர் வீதம் அதிகம் வைத்துக்கொள்ளலாம் என்று குறிப்பிட்டுவிட்ட பிறகு, எங்கே மிச்ச நிலம் இருக்கிறது, மிச்ச நிலத்திற்கு எங்கேபோவது? ஆளுக்கு 7 அடி நிலம்தான் பொதுவில் மிச்சம் இருக்கிறது, எல்லோரும் அங்கேதான் கடைசியாகப் போகவேண்டும் என்று சொல்லியபடி இந்தச் சட்டத்தைக் கொண்டுவந்திருப்பது உண்மையாகவே இது உச்சவரம்புச் சட்டம்தானா என்ற கேள்வியை எழுப்புகிறது. இப்போது கொண்டுவந்திருப்பது உச்சவரம்பு சட்டம்தானா என்று அமைச்சரைக் கேட்க விரும்புகிறேன். அமைச்சர் அவர்களும், இன்னும் சில காங்கிரஸ் கமிட்டியைச் சார்ந்தவர்களும் மிகத் தெளிவாகக் கூறி இருக்கும் சில கருத்துக்களையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதிலும் இரண்டு கருத்துக்களை சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஆவடியிலே நடந்த காங்கிரசு மாநாட்டின்போது தெரிவித்துள்ள கருத்தில் ஒன்று "Increasing agricultural production as well as achieving social and economic justice." என்பதாகும். இதற்கு மேலும், மற்றொன்று "**The landless labour or small peasants to whom the land is** distributed could join those co-operatives for mutual help instead of relying on their **meagre** individual resources". என்பதாகும். இதிலே லாண்ட்லெஸ் லேபர் பற்றிக் குறிப்பிடும்போது, நிலம் இல்லாத உழவர்களுக்கு நிலம் கொடுத்தபின் அவர்கள் சாகுபடி செய்வதற்கும், சிறிய குத்தகைதாரர்களாக இருப்பவர்கள் உதவி பெறுவதற்கும் இந்தக் கூட்டுறவுச் சங்கங்களில் சேரலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறதே, அந்த நில உரிமையை அவர்களுக்கு வழங்குவதற்கு, என்ன வழிவகைகள் கண்டிருக்கிறீர்கள் என்று நான் கேட்க விரும்புகிறேன். இப்போது கொண்டுவந்துள்ள

உச்சவரம்புச் சட்டத்தை நிறைவேற்றுவதின் மூலம் நிலமில்லாத விவசாயிகளுக்கு எவ்வளவு நிலம் கொடுப்பதற்கு வகை செய்திருக்கிறீர்கள் அல்லது எத்தனை கூட்டுறவுப் பண்ணைகள் அமைக்க இருக்கிறீர்கள், அப்படி அமைத்தால் எவ்வளவு பேர்கள் அதிலே உரிமையுடன் பயிர் செய்து உழைத்து உயிர் வாழ வகை செய்திருக்கிறீர்கள் என்று நான் கேட்க விரும்புகிறேன். இதற்கான விதிகள் எல்லாம் இந்தச் சட்டத்திலே செய்யப்பட்டிருக்கிறதா என்றால், இப்போது வந்துள்ள சட்டம் கண்டனத்துக்கு உரியதாகத்தான் இருக்கிறது. சென்னை மாகாணம் நீண்ட காலமாக முன்னேற்றமான சட்டமியற்றும் மாகாணங்களில் ஒன்றாகத் திகழ்ந்து வந்தது என்ற பெயர், இப்போது இந்தச் சட்டம் கொண்டு வந்ததின் காரணமாகப் பாழ்படுத்தப்பட்டிருக்கிறது. பீஹார் மாகாணத்திலும், கேரளாவிலும், இன்னும் பம்பாய் மாகாணத்திலும், ஏனைய சில மாகாணத்திலும் இந்த சட்டத்தை நமக்கு முன்னாலேயே நிறைவேற்றி இருப்பதோடு மட்டுமல்ல. அந்தச் சட்டத்திற்கு அவர்கள் ரெட்ராஸ்பெக்டிவ் எப்பெக்டும் கொடுத்திருக்கிறார்கள். அதன்மூலம் இச்சட்டத்தைக் கொண்டு வருவதற்கு 4 ஆண்டுகள், 5 ஆண்டுகள் முன்பிருந்தே நடைமுறை அமுலுக்கு வந்ததாக அறிவித்திருக்கிறார்கள். அதன்படி அதற்கு முன்னாலே பாகப் பிரிவினை செய்து கொண்டிருந்தாலும், அப்படிப் பிரித்துக்கொண்டிருப்பது இயற்கைக் குடும்பமாக இருந்தால் தவிர, மற்றபடி வேறு யார் பேரிலாவது பினாமி போன்ற முறையிலே பதிவு செய்யப்பட்டிருந்தால், அது செல்லாது என்று தடை செய்திருக்கிறார்கள். அப்படிப் பதிவு செய்யப்பட்டிருக்கிற நிலத்தைக் கைப்பற்றிக் கொள்ளவும் விதி அமைத்திருக்கிறார்கள். ஆனால் நம் சென்னை மாகாணத்திலோ 1952-ம் ஆண்டிலேயே இதைப்பற்றி அமைச்சர்கள் எடுத்துச்சொல்லி இருக்கிறார்கள். அந்த நேரத்திலே இப்போதுள்ளவர்கள் பலர் வேண்டுமானால் அமைச்சராக இல்லாமல் இருந்திருக்கலாம், எப்படி இருந்தாலும், காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களே பேசி இருக்கிறார்கள். 1957 தேர்தலுக்கு முன்னால் இதைச் சொல்லி மக்களிடத்திலே ஆசைகாட்டி இருக்கிறார்கள். அப்படிச் சொல்லப்பட்டதை இப்போது 1962-ம் ஆண்டு தேர்தலுக்கு முன்னதாக, ஒரு எலும்புக் கூட்டைப் போன்ற சட்டமாக உயிரற்ற நிலையில், சத்தற்ற நிலையில், சாரற்ற நிலையில்தான் இன்றைக்கு இந்தச் சட்டத்தைப் பொது மக்கள் முன்னால் கொண்டுவந்திருக்கிறார்கள். இந்தச் சட்டத்தை இப்படியே நிறைவேற்ற முயற்சிப்பது முறையல்ல; மக்களை ஏமாற்றுவது என்று குற்றம் சாட்டுகிறேன். அது மட்டுமல்ல. இந்தச் சட்டம் எப்படி வருகிறது என்றால், முன்னேற்றமான ஒரு சட்டம் வரும் முறை போல் பதுங்கி இருந்து பாய்வதற்குப் பதில், பாய்ந்துவிட்டு பின்னர் பதுங்கிக்கொள்ளக்கூடிய சட்டமாகத்தான் இருக்கிறது. இதை நான் ஏன் கூறுகிறேன் என்றால், இந்தச் சட்டம் வருவதை புலி வருகிறது என்று சொன்னதால்தான்—இந்தப் புலி பாய்ந்து பதுங்குகிறது என்று குறிப்பிட விரும்புகிறேன். அந்த வகையில்

தான் இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவதற்கு முன்னாலேயே தனிப்பட்ட முறையில் ரகசியமாகவேனும் கட்சிக் கூட்டத்தில் கலந்து ஒரு முடிவெடுத்து அறிவிக்காமல் 5 வருடத்திற்கு முன்னா லிருந்தே இந்தச் சட்டம் வர இருப்பதாக கூறிவந்து, இப்போது சட்டமாக நிறைவேற்றுகிற காலத்திலே, அந்தச் சட்டத்தினால் பலன் கிடைக்காத அளவிலே, முன்னெச்சரிக்கையாக நிலச்சுவான் தார்களுக்கும், நிலப் பிரபுக்களுக்கும் ஏற்பாடுகட்கு இடமளித்து விட்டு, இந்தச் சட்டமானது இப்போது கொண்டுவரப்பட்டிருக் கிறது. இது முதலில் புலி பாய்வதைப் போல் பாய்ந்துவிட்டு, பின்னர் பூனை பதுங்கிக்கொள்கிற வகையில்தான் செய்யப்பட் டிருக்கிற சட்டமாகும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன். இந்தச் சட்டத்தினால், சிறு குடியானவர்களோ அல்லது சிறுசிறு குத்தகைதாரர்களோ எந்தவிதத்திலும் பலனடையக் கூடிய வகையிலே இது கொண்டுவரப்படவில்லை என்பதை மிகவும் வேதனையோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

அது மட்டுமல்ல, உண்மையாகவே இந்தச் சட்டம் பயன்பட வேண்டுமானால் இந்தச் சட்டத்திலிருந்து கிடைக்கின்ற மிச்ச நிலம் குடியானவர்களுக்கு அதாவது அந்த நிலத்தை உழுகின்ற நிலமற்ற உழவர்களுக்கு கிடைக்க வேண்டுமென்ற அடிப்படையி லேயும், சிறுசிறு குத்தகைதாரர்கள் தங்களுக்குள்ள நிலத்தை உழுது அந்த நிலத்தின் பலனை தொடர்ந்து அனுபவிக்கக்கூடிய பாதுகாப்பு அளிக்கும் வகையிலேயும் இருக்க வேண்டும். இதற்கு இந்தச் சட்டத்திலே இடம் இருக்கிறதா என்றால், அதற்கு இந்தச் சட்டத்திலே வழி செய்யப்படாமல், அதற்கு மாறான பல விதி விலக்குகள் அளிக்கப்பட்டிருப்பதைத்தான் காண முடிகிறது. அப்படி விதிவிலக்கு யார் யாருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்று பார்த்தால், உச்சவரம்பு நிர்ணயிக்கப்பட்டிருக்கிற அளவுக்கும் மேலேயும் நிலம் கொடுக்கக்கூடிய முறையிலேதான் இந்த விதி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அப்போது உச்சவரம்பு சட்டம் என்று ஒரு சட்டத்தைப் போடுவானேன்? கரும்பு விளையும் நிலத் திற்கு விதிவிலக்கு, மேய்ச்சல் நிலத்திற்கு விதிவிலக்கு, பால் பண்ணைக்குத் தேவையான நிலங்களுக்கு விதிவிலக்கு என்று பல வகையான விதிவிலக்குகளைத்தான் தெரிவித்திருக்கிறார்கள். ஆகவேதான், நான் கனம் அமைச்சர் அவர்களைத் தயவுசெய்து இவற்றிற்கு புள்ளிக் கணக்குத் தரும்படி கேட்டுக்கொள்கிறேன். இப்படி இத்தனை விதிவிலக்குகள் கொடுப்பதால், அதன் மூலம் எவ்வளவு ஏக்கர் நிலங்கள் உச்சவரம்பிலிருந்து தப்பித்துக்கொள்ள வழி செய்யப்பட்டிருக்கிறது, இப்போது கொண்டுவரப்பட்டுள்ள சட்டத்தின் மூலம் அரசாங்கத்திற்கு எவ்வளவு ஏக்கர் நிலம் மிச்சம் வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அப்படிக் கிடைக்கும் நிலத்தை எத்தனை குடியானவர்களுக்கு பிரித்துக்கொடுத்து, எத்தனை கூட்டுறவுப் பண்ணைகளை ஆரம்பிக்க இருக்கிறார்கள் என்ற புள்ளிவிவரங்களைத் தெரிவிக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன். அந்த வகையிலே இதைப் பார்த்தால், எந்த விதத்திலும்

உழவனுக்கு உரிமை கொடுக்க முடியாத அளவிலேதான் இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது.

அமைச்சர் அவர்கள் இந்த மசோதாவை கொண்டுவந்த நாளில் சொல்லும்போது மட நிலங்களுக்கு வேண்டுமானால் 200 ஏக்கர் அளவு நிலத்தை கொடுத்துவிட்டு, மிச்ச நிலங்களைக் கைப்பற்றிக் கொள்ளலாம் என்று தெரிவித்தார்கள். ஆனால் அதே அமைச்சர் அவர்கள் இப்போது அரசியல் சட்டத்திலே இருக்கிற 26 (சி) பிரிவைக் காரணமாகக் காட்டி, அந்தப் பிரிவின்படி நாம் அவர்களது நிலத்தைக் கைப்பற்ற முடியாது என்ற கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். அமைச்சர் அவர்கள் அரசியல் சட்டத்தைக் காட்டி இவ்வாறு சொல்வதைக் குறித்து நான் உண்மையிலேயே மிகவும் வருந்த வேண்டியிருக்கிறது. அமைச்சர் அவர்கள் சட்டம் தெரிந்தவராக இருந்தாலும், நான் சட்டம் தெரியாதவனாக இருந்தாலும், சட்டம் தெரிந்தவர்கள் கூறுகின்ற கருத்தையும், மற்றவர்கள் சொல்கின்ற கருத்தினையும் புரிந்துகொண்ட வகையிலே என்னுடைய கருத்தை நான் கூறுகிறேன். அரசியல் சட்டத்தின் **26** (சி)பிரிவில் "To own and acquire movable and immovable property". என்று இருக்கின்ற காரணத்தினால், அவர்கள் பொது நியதிக்கு உட்படாமல் அதற்கு மேலும் சொத்து வைத்துக்கொள்ளலாம் என்பதை யாரும் நீதி, நேர்மை என்று கருத மாட்டார்கள். பொது மக்களுக்கு ஒரு சட்டம், ஒரு நியதி என்று இருக்குமானால் அந்தச் சட்டத்திற்கு உட்பட்ட வகையிலேதான் மடத்திற்கும், கோயில்களுக்கும் அல்லது அதைப் போன்ற பெரிய அமைப்புகளுக்கும், தர்ம ஸ்தாபனங்களுக்கும் நிலபுலம் இருக்க முடியுமே தவிர, அவைகளுக்கு மட்டும் ஒரு தனி நியதி இருக்க முடியாது. அப்படி அதை தனி நியதிக்கு உட்படுவதாகச் சொல்வார்களேயானால், அந்த நிலத்தை உழுகின்ற உழவன் அந்த நிலத்தோடு இணைக்கப்பட்டிருக்கிறான், அந்த உழவன் உழக்கூடிய நிலம் அந்த நிலையத்தோடு இணைக்கப்பட்டிருக்கிறது, அந்த நிலம் நாட்டினுடைய பொது சொத்து. அந்த நிலத்திலே இருந்து உற்பத்தியாகக்கூடிய உணவுப் பொருளும் நாட்டின் பொதுச் செல்வம். ஆகவே, நாட்டின் பொதுச் செல்வத்தில், உழவர் உழைப்பில் அவர்களுக்கு மட்டும் விதிவிலக்கு கொடுப்பதென்றால், இதிலே உட்பட்ட அனைவரையும் அவர்களிடம் அடிமைப்படுத்த வேண்டியிருக்கிறது. அப்படி அடிமைப்படுத்தும் வகையிலே ஒரு சட்டத்தைக்கொண்டு வருவது என்றால், அது நியாயமா அல்லது நேர்மைதானா என்று கேட்க விரும்புகிறேன். பொது நியதிக்கு உட்பட்டே அற நிலையங்களும், சொத்துக்களை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று இந்த நாட்டிலே உள்ள சுப்ரீம் கோர்ட் அல்ல என்றாலும், அமெரிக்க நாட்டு சுப்ரீம் கோர்ட்டு சொல்லியிருக்கிறது. அப்படி இருக்கும்போது, இந்த மடாலயங்களின் சொத்துக்களுக்கு மட்டும் விதிவிலக்கு என்று ஒரு சட்டத்தை நாம் ஏற்படுத்துவதானால், அது எந்த வகையில் அறத்தோடு பொருந்தும் என்று நான் கேட்கிறேன்.

அவர்களிடத்திலே மட்டும் எல்லா நிலங்களையும் குவிய வைத்து, அதிலே கிடைக்கக்கூடிய லட்சக்கணக்கான நெல் மூட்டைகளை பதுக்கி வைத்துக்கொள்வதற்கு அனுமதிப்போமா? இது பொது நியதிக்கு எவ்வாறு பொருந்தும்? உணவுப் பொருள்கள் எல்லா வற்றையும்கூட அவர்களின் தரும சொத்து என்று கருதிவிட்டால், அதேபோல், உணவுப் பொருளைச் சேர்த்து வைத்துக்கொண்டால் பதுக்கல் என்று கருத முடியுமா? அதனால்தான், **"To own and acquire movable and immovable property"** என்ற இப்படிப்பட்ட உரிமை இருக்கிறது என்று சொன்னாலும், இந்த உரிமை பொது நியதிக்கு உகந்த முறையல்ல என்பதைத் தெரிவிக்க விரும்பு கிறேன். அதனை அடுத்து 26 (டி) பிரிவில், **"To administer such property in accordance with law"** என்று இருக்கிற காரணத்தினால், நிலத்தையும், இதர சொத்துக்களையும் நிர்வாகம் செய்கிற உரிமை பொதுவான சட்டத்திற்கே உட்பட்டதாகத்தான் இருக்கிறது என்று தெரிவித்துக்கொள்கிறேன். அதற்கும் உச்சவரம்பு 30 ஏக்கர் என்று இருக்குமானால், அதற்கு மேற்பட்ட நிலத்தை தனிப் பட்ட முறையில் இல்லாமல் பொதுவில் பயன்படுத்துவதற்கு ஒரு இடம் ஏற்படும், அதிலே அவர்கட்கு கிடைக்கக்கூடிய லாபத்தில் பங்குக்கு வேண்டுமானால் தனியே ஒரு சட்டம் இயற்றிக்கொள்ள லாம். அற நிலையத்தைப் பொறுத்த மட்டில் இவ்வாறு அவர்கட்கு ஒரு நிரந்தர உதவித் தொகை அளிப்பதுதான் பொருத்தமாக இருக்குமென்பதை நான் உணர்கிறேன். ஆகவே, இந்தச் சட்டத் திலே அறநிலைய நிலத்துக்கு அரசியல் சட்டப்படி இடமில்லை என்று அமைச்சர் கருதினாலும், நிலத்திற்கு ஒரு உச்சவரம்பு என்று சட்டம் செய்யும்போது இப்போதே அறநிலைய நிலத்திற்கும் பொதுவான ஒரு சட்டம் செய்யாது போனால் அந்த உழவர்கள் உரிமை பறிபோகும். அவர்களிடத்திலே மேலும் நிலம் சேராது. மேலும் உச்சவரம்பு கட்டியபின் அப்படிச் சேருமென்று நாம் எதிர் பார்க்கவும் முடியாது. அப்படிச் சேரினும் எப்போதும் நாம் சட்டத்திலே நிலத்தை அக்வயர் செய்வதற்கு கைக்கொள்ள இடம் வைத்துக்கொள்ள வேண்டும்.

முப்பது ஏக்கர் நிலம்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்கு மேல் உள்ள நிலத்திற்கு நஷ்டஈடு கொடுத்து விடுகிறோம் என்று சொல்லப்படுகிறது. இப்படி நஷ்டஈடு கொடுக்கப்படும் என்று சொல்லும்போதுகூட, பொது நலக் காரியத்திற்காக அதிக நிலத்தை விட்டுக்கொடுக்காமல் அற நிலையங்கள்தான் வைத்திருக்க வேண்டும் என்று சொல்லக்கூடியவர்கள் மடத்தம்பிரான்களாகத் தான் இருக்க முடியுமே தவிர, பொது நோக்கமுள்ள, அரசியல் நல்ல முறையில் நடக்க வேண்டுமென்றும், மக்களுக்குப் பணிபுரிய வேண்டுமென்றும் நினைப்பவர்கள் ஆகமாட்டார்கள். அதேபோன்று சர்க்கரை ஆலைகளுக்கும் உச்சவரம்பிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அப்படியென்றால் அந்த நிலத்திலே உழுதுகொண்டு இருப்பவர்கள் கதி என்னவாவது? இந்த

30th August 1961] [Sri K. Anbazhagan]

நிலத்திலே உழுகின்ற உழவர்களின் உரிமைகள் கட்டாயம் பாதிக்கப்படும். இந்த உரிமை பாதிக்கப்படாமல் இருக்க வேண்டுமானால், கூட்டுறவு முறையிலே வேண்டுமானால் அதற்கென்றே கூட்டுறவுப் பண்ணை ஒன்றை அமைத்து, சர்க்கரை ஆலை நிர்வாகத்திற்கு கரும்பு கிடைக்க உதவலாமே தவிர, அவர்களுக்கு விதிவிலக்கு அளிக்கக்கூடாது. அப்படி இல்லாமல் இந்தச் சட்டத்தை நிறைவேற்றுவார்களேயானால், இது அக்கிரமமாக ஏழைகளை ஏமாற்றக் கூடிய, அவர்களை வஞ்சிக்கக்கூடிய சட்டமாக அமையுமே தவிர, அவர்களையெல்லாம் வாழ்விக்கின்ற சட்டமாக இது ஆகாது என்னும் கருத்தினை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த மாற்றத்தை தேடிப் பெறுவதற்கு கனம் அமைச்சர்கள் முன் வரவேண்டும். அது மாத்திரமல்ல. உண்மையாகவே உச்சவரம்பு 30 ஏக்கரா என்று வைத்திருப்பது, ஒரு தனி மனிதன் உழுது சாகுபடி செய்தால் 2, 3 ஏக்கரா சாகுபடி செய்யலாம் என்று சொன்னதற்குப் பின்னர், நிலத்தில் பாடுபடக் கூடியவர்களுக்கு குத்தகைக்கு உச்சவரம்பு நிர்ணயிக்க வேண்டும் என்ற முறை இருக்கும்பொழுது, குடும்பத்துக்கு 15 ஏக்கருக்கு மேலாக 30 ஏக்கர் என்று வைத்திருப்பது அநியாயம். அதற்கு மேலும் குடும்பத்தில் 5 பேருக்கு மேல் உள்ள ஒவ்வொருவருக்கும் 5 ஏக்கர் வைத்துக்கொள்ளலாம் என்பது முறையற்ற செயல். எனவேதான், 15 ஏக்கரா ஒரு குடும்பத்திற்கு என்றும், குடும்பத்தில் ஐவருக்கு மேல் அதிகமாக இருப்பவர்களுக்கு தலைக்கு 2 ஏக்கர் வீதம் வைத்துக்கொள்ளலாம் என்றும் சட்டம் செய்ய அமைச்சர் அவர்கள் முன்வர வேண்டும்.

11-00 a.m.

நில உச்சவரம்புக்கு ஸ்டாண்டர்டு ஏக்கர், எந்த அடிப்படையில், எந்த முறையில் தீர்மானித்திருக்கிறார்கள்? பின்னர் அவர்களிடம் பெறும் நிலத்திற்கு நஷ்டஈடு தருவது எந்த முறையில் என்று கூறப்பட்டுள்ளது? இவை இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தால் வேற்றுமை புலனாகும். இவற்றை ஒரே முறையில் வைக்க வேண்டும். இல்லாமல், 'பேஸிக் லாண்டு ரெவின்யூ' அடிப்படையான நிலத் தீர்வை அடிப்படையில் ஸ்டாண்டர்டு ஏக்கர் தீர்மானித்திருக்கிறார்கள். முதலில் சட்டம் வந்த வடிவில் 'இரிகேஷன் செஸ்' தண்ணீர் தீர்வை சேர்ந்திருந்தது. தண்ணீர் தீர்வையும் சேர்ந்து இருந்தால், அதிக வரிவிகிதம் வரும், அதனால் வரம்பு கட்டப்படும் நிலம் குறையும் என்ற காரணத்தினால், அந்த அடிப்படையில் தீர்மானிப்பதை கைவிட்டு, ஸ்டாண்டர்டு ஏக்கர் என்பதை 'பேஸிக் லாண்டு அசெஸ்மெண்டு' அடிப்படையிலே தீர்மானித்துள்ளனர். இதனால் அதிக நிலம் நிலச் சொந்தக்காரர்களுக்குக் கிடைக்கும். அப்படி அதிக நிலம் அளித்துவிட்டு மிச்சமாகக் கிடைக்கக்கூடிய குறைந்த நிலத்திற்கு காம்பென்சேஷன் எந்த அடிப்படையில் அமைத்திருக்கிறார்கள் என்றால், ஆண்டு நிகர வருமான அடிப்படையில் **(Based on annual net income)** என்று அமைத்திருக்கிறார்கள். என்ன வரி கட்டுகிறார்களோ அந்த

அடிப்படையிலேயே இத்தனை மடங்கு ஈட்டுத் தொகை என்று காம்பென்சேஷன் அமைக்கக்கூடாதா? உண்மையில், நிகர வருமான அடிப்படையில் நஷ்டஈடு கொடுக்கவேண்டும் என்று ஒத்துக்கொண்டு, ஆனால் அதே நேரத்தில் 'பேசிக் லாண்டு ரெவின்யூ' அடிப்படையில் உச்சவரம்பு நிலவரி 'ஸ்டாண்டர்டு ஏக்கர்' தீர்மானிக்கப்பட வேண்டுமென்று கூறுவது, ஒன்றுக்கொன்று முரணானது. இரண்டு விதத்திலும் ஏழைகளை ஏமாற்றும் முறையில், நிலச்சுவான்தார்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் முறையில், அதிக நிலமும்-சொத்தும் தனிப்பட்டவர்களிடத்தில் சேரும் முறையில், ஏழைகளின் வாழ்க்கையில் மண்ணை அள்ளிக் கொட்டுகிற முறையில் அமைந்திருக்கிற ஒரு சட்டம் இது என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

கடைசியாக நான் தெரிவிக்க விரும்புவது என்னவென்றால், இப்படிப்பட்ட ஒரு சட்டம் கொண்டு வருவார்கள் என்று எதிர்ப் பார்த்து அல்ல, எதிர்பார்க்காத நாளிலேயே,

> 'இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது
> கைசெய்தூண் மாலை யவர்'.

என்று திருவள்ளுவர் கூறியிருக்கிறார். எவன் ஒருவன் பாடுபட்டு நிலத்தில் உழுது அதனால் பலன் பெறுகிறானோ, அவன்தான் உலகத்திலுள்ள மற்றவர்களுக்கெல்லாம் மிகச் சிறந்த வகையில் உதவியாக இருப்பான். அவன் இரக்காமல், ஏமாற்றாமல் பிறருக்குத் துணை நிற்பான் என்ற கருத்தைக் கூறினார். அவ்வளவு வல்லமை பெற்றவன் உழுபவன் இன்று ஏமாற்றப்படுகிறான். மேலும்,

> 'உழவினார் கைம்மடங்கில் இல்லை விழைவதூஉம்
> விட்டே மென் பார்க்கு நிலை'.

என்று வள்ளுவர் கூறுகிறார். அதாவது, உழுபவனுடைய கை மடங்குமாயின், ஆங்கிலத்திலே சொன்னால், அவர்கள் 'ஸ்டைரைக்' செய்வார்களேயானால், சாப்பாடுகூட தேவையில்லை என்று சொல்லக் கூடிய துறவிக்குக்கூட வாழ்க்கை நடத்த முடியாத நிலை ஏற்படும் என்று எச்சரிக்கிறார். அமைச்சர் அவர்கள் அப்படிப்பட்ட துறவி ஆகவில்லை, ஆகவும் மாட்டார்கள் என்றே நம்புகிறேன். துறவிக்கே நிலை இல்லை அமைச்சு என்னாவது? மாறாக உழவர்களும் உரிமையை மறந்தவர்கள் அல்ல. ஆகையினால் அவர்கள் புரட்சிக்குத் தயாராக இருக்கிறார்கள். உரிமையை கேட்க வேண்டிய முறையில் கேட்டுப் பெற்றே தீருவார்கள். உரிமைக்காக நீண்ட நாள் காத்துக்கொண் டிருப்பவர்கள். அப்படியும் அமைச்சர்கள் உழவர்களைக் கைவிட்டு, மிராசுதார்களைக் காப்பாற்றும் இந்தச் சட்டத்தை நிறைவேற்று வோம் என்று சொல்வார்களேயானால், அதற்கும் ஒரு குறள் உள்ளது எச்சரிக்கும் வகையில்,

> 'சொல்லப் பயன்படுவர் சான்றோர், கரும்புபோல்
> கொல்லப் பயன்படும் கீழ்'.

என்றார் வள்ளுவர். அரசியல் முறையிலே, ஜனநாயக முறையிலே, கொல்லுவது என்றால், ஆளும் கட்சி, அரசை நிர்வகிக்கின்றவர்கள் ஏழைகளை காப்பாற்ற வில்லையென்றால், எதிர்க்கட்சிக்காரர்கள் சொல்லியும் அதைப் பயன்படுத்திக் கொள்ளவில்லையென்றால், அப்படிப்பட்ட கட்சியிடம் ஆட்சியை வீழ்ச்சியுறச் செய்வதே கொல்வது என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த அளவுக்கு உழவர்கள் எழுச்சி கொள்வதற்கு முன்னால், அமைச்சர் அவர்கள் ஆழ்ந்து பரிசிலனை செய்து இந்தச் சட்டத்தைப் பலனுள்ளதாக மாற்றி அமைக்க முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலும் உறுப்பினர்கட்கு தந்திருக்கிற செலக்ட் கமிட்டி அறிக்கையைப் பார்த்தால், 4, 5 புஸ்தகங்களிலும், எந்தப் பக்கத்தை புரட்டிப் பார்த்தாலும், இச்சட்டத்தில் அமைச்சர் அவர்கள் மேற்கொண்ட கருத்திற்கு மாறான கருத்தையே பெரும்பாலோர் வற்புறுத்தியிருக்கிறார்கள்; விவசாயப் பிரதிநிதிகள் வற்புறுத்தியிருக்கிறார்கள், விவசாய சங்கங்கள் வற்புறுத்தியிருக்கின்றன, காங்கிரஸ் விவசாயிகள் வற்புறுத்தியிருக்கிறார்கள், கம்யூனிஸ்டு விவசாயிகள் வற்புறுத்தியிருக்கிறார்கள், கட்சிச் சார்பற்ற உழவர்கள் வற்புறுத்தியிருக்கிறார்கள். இவ்வளவுக்கும் சேர்த்து முடி சூட்டியது போல், எதிர்க்கட்சிக்காரர்கள் எழுதிய மாறுபட்ட கருத்துக்கள் ஒருபுறம் இருக்க, திருவாளர் கோசல்ராம் அவர்களும் மாறுபட்ட கருத்தையே எழுதி வைத்திருக்கிறார். அவர் அணிந்திருக்கிற கதர் சட்டை நல்ல கதர் சட்டை என்றுதான் நினைக்கிறேன். காங்கிரஸ்காரர்களிடத்திலேயே மாறுபட்ட கருத்து வளரக்கூடிய அளவுக்கு இந்தச் சட்டம் இருக்கிற காரணத்தினால், இப்பொழுதாவது இதை ஏற்று, இந்த அடிப்படை கருத்துக்களை நாங்கள் ஏற்றுக்கொள்ளுகிறோம் என்று உறுதி கூறவேண்டும் அல்லது நாங்கள் நடத்துவது ஜனநாயக ஆட்சியல்ல, ஒரு கட்சி ஆட்சியும்கூட அல்ல, ஒரு கட்சிக்குள்ளே ஒரு கூட்டத்தார் பிரபுக்கள் நடத்தும் ஆட்சி' என்று ஒப்புக்கொள்ள வேண்டும் என்று வேண்டி, என் உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

**SRI M. KALYANASUNDARAM** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா மீது நான் மிகுந்த வருத்தத்தோடு பேச எழுந்து நிற்கிறேன். எனக்கு முன்பு பேசிய நண்பர் அன்பழகன் அவர்கள் இது ஒரு எலும்புக்கூடு, உயிரற்றது என்று இந்த மசோதாவை வர்ணித்தார். உயிரற்ற எலும்புக்கூடாக இருந்தாலாவது யாருக்கும் துன்பம் இல்லாமல் இருக்கும், காக்காயை விரட்டுவதற்காகவாவது பயன்படும். இது அப்படிக் கூட இல்லை. ஆகவே, இதை உயிரற்ற எலும்புக்கூடு என்று வர்ணிப்பது எலும்புக்கூட்டையே அவமதிக்கக்கூடியதாகக்கூட இருக்கும்.

**(Sri N. S. Ramalingam in the Chair.)**

பல்லாயிரக்கணக்கான விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்றுவதற்கு உடனடியாக இது பயன்பட்டு, ஏற்கனவே இருக்கக்கூடிய ஒரு சில நிலப்பிரபுக்கள் கிட்டத்தட்ட 40, 50 சதவிகிதம் சாகுபடி நிலத்தை தங்கள் கையில் வைத்துக்கொண்டிருப்பவர்கள் புதிய முறையில் வைத்துக்கொண்டு அந்த நிலத்தில் ஒரு செண்டு கூட எடுக்காமல் எல்லா நிலத்தையும் தாங்களே வைத்துக்கொண்டு நல்ல முறையில் வாழக்கூடும். இந்த மசோதா இப்பொழுது இருக்கக்கூடிய ரூபத்தில் சட்ட புத்தகத்தில் ஏறுவதற்கு யாரும் அனுமதிக்கக்கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த மசோதாவில் வரவேற்கக்கூடிய அம்சம் ஒன்றுமில்லை, 'பிரிஆம்பில்' ஒன்று தவிர. 'பிரிஆம்பிலில்' கூறப்பட்டிருக்கக்கூடிய சில கருத்துக்கள் ஒன்றுதான் ஏதோ வரவேற்கக்கூடிய முறையில் அமைந்திருக்கின்றன. அதுவும் படிப்பதற்கு இனிமையாக இருக்கிறது. செலக்ட் கமிட்டிக்குப் போய் மாறுதல் அடைந்து வந்திருக்கிறது. செலக்ட் கமிட்டிக்குப் போன பிற்பாடு இந்த மசோதா முன்னால் இருந்ததைவிட இன்னும் மோசமான முறையில், உடனடியாக விவசாயிகளை வெளியேற்றக்கூடிய முறையில், நிலப்பிரபுக்கள் ஏற்கனவே இருந்தது மட்டுமல்ல, பின்னால் அதிகமாக நிலத்தை வைத்துக்கொள்ளுவதற்கு வசதி செய்யக்கூடிய முறையில் திருந்தி வந்திருக்கிறது. ஆகையினால்தான் இந்த மசோதாவை எந்தக் காரணத்தைக்கொண்டும் இந்த ரூபத்தில் அனுமதிக்கக்கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம்.

கொள்கை ரீதியில் எடுத்தால், கொள்கையை ஆதரிக்கக் கூடியவர்கள் அந்தக் கொள்கையை நடைமுறையில் கொண்டுவர வேண்டும். இரண்டு விதத்திலிருந்து இந்த மசோதாவிற்கு எதிர்ப்பு வரும். இந்தக் கொள்கையை ஒத்துக்கொள்ளாதவர்கள், அரசாங்கம் இம்மாதிரி நில உடைமை வைத்திருக்கிறவர்களிடம் எப்படி குறுக்கிடலாம், அரசாங்கம் இதில் குறுக்கிடக்கூடாது, நில உடைமை வைத்திருக்கக்கூடியவர்கள் வாழ்க்கையில் அரசாங்கம் தலையிடக்கூடாது, இது ஆண்டவனிடத்திலிருந்து வரம் வாங்கிக்கொண்டு வந்த உரிமை, அதை மனிதன் யாரும் மாற்றக்கூடாது என்கின்ற ஒரு தத்துவத்தில் கூட பேசுகிறவர்கள் ஒரு சிலர் இன்னும் இந்த நாட்டில் இருக்கிறார்கள். அவர்கள் எதிர்ப்பார்கள். அவர்கள் எதிர்ப்புக்கும், என்னுடைய எதிர்ப்புக்கும் வித்தியாசம் இருக்கிறது. நிலப்பிரபுக்கள் கையிலிருந்து நிலத்தை எடுத்து உழுபவர்களுக்கு மாற்றக்கூடிய ஒரு திசையில், உழுபவனுக்கே நிலம் சொந்தமாகக்கூடிய பாதையில் நாம் போகவேண்டும் என்ற கருத்தில் நான் இந்த மசோதாவை ஆராய்கிறேன். என்னுடைய எதிர்ப்புக்கும், இன்னும் சிலர் எதிர்ப்பதற்கும், அதாவது சுதந்திரா கட்சி எதிர்ப்பதற்கும் அடிப்படையிலே வித்தியாசம் இருக்கிறது. எதிர்ப்பது ஒன்றாக இருக்கலாம். இந்த மசோதா தீவிரமாக மாற்றப்படவேண்டும் என்பதற்காக நான் எதிர்க்கிறேன். நான் எதிர்ப்பதும் தெளிவு. எதிர்ப்பதில் உள்ள நோக்கத்தையும் தெளிவாக தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

30th August 1961] [Sri M. Kalyanasundaram]

அதே சமயத்தில் இந்த மசோதாவை கம்யூனிஸ்டு கட்சியின் கண்ணோட்டத்தோடு திருத்தவேண்டும் என்று நான் கூறுவதாக தயவுசெய்து யாரும் நினைக்க வேண்டாம். கம்யூனிஸ்ட் கட்சி அதிகாரத்தில் இருந்தால், மெஜாரிடியாக இருந்தால் என்ன செய்யும், கம்யூனிஸ்டு கட்சியின் இறுதி லட்சியம் என்ன, அந்த லட்சியத்தை அடையவேண்டும் என்ற நோக்கத்தோடு இதை ஆராய்ந்து அப்படித் திருத்தவேண்டும் என்று நான் விரும்பவில்லை. அந்த அடிப்படையிலே இதை குறை கூறவில்லை. காங்கிரஸ் கட்சி சுதந்திரம் அடைவதற்காக போராடக்கூடிய நிலையில் இருந்து கொடுத்த வாக்குறுதிகள் இருக்கின்றனவே அந்த அடிப்படையி லிருந்தும் இதை நான் ஆராய விரும்பவில்லை. ஏனென்றால், சுதந்திர போராட்ட காலத்தில் எல்லா மக்களுடைய ஆதரவும் வேண்டியிருக்கும் என்று தீவிரமான கருத்துக்களை சொல்லியிருக்க லாம். ஆனால், பதவியில் வந்ததற்குப் பிற்பாடு, அதிகாரம் கையில் இருக்கும்பொழுது கொஞ்சம் நிதானமாகப் போக வேண்டும் என்ற எண்ணத்தில் இருக்கலாம். சிறிது அளவு மாற்றிக்கொள்ளுவதாக சொல்லலாம் அந்த வாக்குறுதிகளை. அப்படி பதவியிலிருந்து கொண்டு நிதானமாக வெளியிட்ட அறிக்கையின் அடிப்படையிலே தான் நான் இந்த மசோதாவை ஆராய விரும்புகிறேன். காங்கிரஸ் மகாநாடுகளில், குழுவில் என்ன சொல்லுகிறார்களோ, ஆவடி மகா நாட்டிலும் சரி, நாகபுரி மகாநாட்டிலும் சரி மேடையில் பேசிய அடிப்படையில்கூட நான் இதை ஆராய விரும்பவில்லை. இந்திய அரசாங்கத்தில் பொறுப்புள்ள அமைச்சர்கள் என்ற முறையிலே, திட்ட கமிஷன் என்ற பெயரால், அரசியல் சட்டத்தின் பெயரால், அறிவிக்கப்பட்டிருக்கிற கொள்கைகளின் மேல் இந்த மசோதாவின் தராதரத்தை ஆராய விரும்புகிறேன். இதன் நோக்கம் என்ன? நில உடமைக்கு மட்டும் உச்சவரம்பு நியமிக்க வேண்டுமா என்று கேட்கிறார்கள். நில உடமைக்கு மட்டும் உச்சவரம்பு கட்டப்படுகிற போது, வீடுகள் வைத்திருப்பவர்களுக்கும் இவ்வளவு வீடுகள்தான் வைத்துக்கொள்ளலாம், இத்தனை மில்கள்தான் வைத்துக்கொள்ள லாம் என்று ஏன் செய்யவில்லை என்று சுதந்தரா கட்சித் தலைவர்கள் கேட்கிறார்கள். அவர்களைப்பற்றி நாம் கவலைப்படவில்லை. ஏனெனில் அவர்கள் உச்சவரம்புக்கே எதிரானவர்கள். ஆகவே, அவர்கள் சொல்லுவதில் ஆச்சரியம் இல்லை.

23-ம் தேதி சட்ட சபைக்குள்ளே நுழையும்போதே, நிதி யமைச்சர் "என்ன ஹார்பர் தொழிலாளர் படையை நிறுத்தி விட்டீர்கள்" என்று கேட்டார்கள். நான் என்ன சமாசாரம் என்று கேட்டேன். அவர்கள் "இவர்கள் சம்பளத்தை சீலிங் செய்தால், இவர்கள் ஒப்புக்கொள்வார்களா" என்றார்கள். காங்கிரஸ், சோஷ லிசம் அப்படியோ என்னவோ, எல்லோரையும் ஊழியர்களாகவே வைத்திருக்க வேண்டும் என்பதுதான் அவர்கள் சோஷலிஸமோ என்னவோ. நாங்கள் சொல்லுவது என்ன? நில உடமைக்கு முதலில் வரம்பு வைக்க வேண்டும் என்று சொல்லுகிறோம். என்ன காரணம்? கம்யூனிஸ்ட் கட்சி கருத்து, தனிப்பட்டோர் உடமைகளை

தடை செய்வது இறுதி லட்சியம் அல்ல. சமுதாயத்திற்குப் பொதுவான பொருள்களிலே, தனிப்பட்டோர் ஆதிக்கம் இருக்கக்கூடாது. "ரைட் டு ப்ரைவேட் ப்ராபர்டி" யைப் போக்குவதில், தனி நபர் உரிமையை பாதிக்க வேண்டும் என்பதல்ல கம்யூனிஸ்ட் கட்சியின் கருத்துக்கூட.

அரசியல் சட்டம் 39 (சி) பிரிவில் என்ன சொல்லியிருக்கிறது என்றால் :

'39 (c) that the operation of the economic system does not result in the concentration of wealth and means of production to the common detriment'.

என்று இருக்கிறது. அதையேதான் ப்ரீஆம்பிளிலும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த மசோதாவை உருவாக்கும்போது, விவாதத்தில் பல ஆட்சேபனைகளுக்கு நானே பதில் சொல்லியிருக்கிறேன் என்று சொன்னால் அது தற்பெருமை என்று கொள்ள மாட்டார்கள் என்று நினைக்கிறேன். ப்ரீஆம்பிளின் நோக்கம் நிறைவேறவேண்டும் என்றால், உற்பத்தி சாதனங்கள், சமுதாயத்திற்கு ஆபத்து ஏற்படும் வண்ணம் ஒரு சிலர் கையில் குவிந்து போகக்கூடாது. அப்படி ஏற்படுவதைத் தடுக்கக்கூடிய வகையில் பொருளாதார அமைப்பு வளர்க்கப்பட வேண்டும். அதுதான் அரசியல் சட்டத்தின் 39 (சி)-ல் சொல்லப்பட்டிருக்கிறது. அரசாங்கம் என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்பதெல்லாம் சாப்டர் 3, 4-ல் வருகிறது. இது, 31-ம் வருஷம் கராச்சி காங்கிரஸ் தீர்மானத்தைத் தழுவி எழுதப்பட்டிருக்கின்றன. அந்த நோக்கம் நிறைவேற வேண்டும் என்பதுதான் என் கருத்தும். திட்ட கமிஷனும் அதையே வேறு வார்த்தைகளால் சொல்லுகிறார்கள். "வெல்த் அண்ட் மீன்ஸ் ஆப் ப்ரொடக்ஷன்" என்று சொல்லும்போது, டிக்ஷனரி அர்த்தத்தில் அதைப் பார்க்கக்கூடாது. "வெல்த்" என்ற ஆங்கில பதத்திற்கு, "செல்வம்" என்று அர்த்தம் கொள்ளவேண்டும், "சொத்து" என்றல்ல. செல்வம் என்பது என்ன ? உற்பத்தியாகும் பொருள்கள், துணி, உணவுப் பொருள்கள், முதலியவை. இவை ஒரு சிலர் கையில் சமுதாயத்திற்கு பாதகம் ஏற்படும் வகையில், குவிய விடக்கூடாது. "மீன்ஸ் ஆப் ப்ரொடக்ஷன்" அதாவது, உற்பத்தியாகக்கூடிய சாதனங்கள், தொழிற்சாலைகள், கருவிகள், சாகுபடி நிலம், இவை சமுதாயத்திற்கு ஊறு விளைவிக்கும் வகையில் ஒரு சிலர் கையில் குவியக் கூடாது. அப்படி விளைவதைத் தடுக்க வேண்டும். இன்றைக்கு உற்பத்தி சாதனம் பஞ்சாலை என்றால், அது ஒரு சிலர் கையில் குவியக்கூடாது. அதே போல, நிலக்கரி, பொதுவான உற்பத்தி சாதனம் என்றால், அது ஒரு சிலர் கையில் குவிந்து போவதைத் தடுக்க வேண்டும் ; அதேபோலத்தான் இயந்திரங்கள், தோட்ட நிலங்கள் இவைகளும் ஒரு சிலர் கையில் குவிந்து இருந்தால் அதைத் தடுக்க வேண்டும். அப்படிப் பார்க்கும்போது, இன்றைக்கு விவசாய நிலங்கள், சமுதாயத்திற்கு ஊறு விளைவிக்கும் வகையில், ஒட்டு மொத்தமாக, ஒரு சிலர் கையில் குவிந்தி

30th August 1961] [Sri M. Kalyanasundaram]

ருப்பதைப் படிப்படியாகப் போக்க வேண்டும். அப்படிக் குவி வதைத் தடைசெய்து அரசாங்கம் எடுக்க வேண்டும். அதைத் தான் அரசியல் சட்டத்தில் ஏற்றியிருக்கிறார்கள். பொருளாதார நிபுணர்கள், சோஷலிசத்தை விரும்பும் உண்மையான நிபுணர்கள். உடனடியாக எல்லா வருமானங்களுக்கும், சொத்துக்களுக்கும் கட்டுப்பாடு செய்வது என்பதல்ல அரசியல் சட்டத்தின் நோக்கம். அப்படித் தடுக்காமல் விட்டால் என்ன ஏற்படுகிறது? தேசத்தின் பொருளாதார அபிவிருத்திக்கு, திட்டத்தின் நோக்கங்களுக்கு குந்தகம் ஏற்படுகிறது. அப்படிச் சொல்லும்போது, தனிப்பட்ட தச்சர்கள், கொல்லர் கருவிகளுக்கு வரம்பு கட்டு என்று சொல் வதா? அது அல்ல அர்த்தம். சமுதாயத்திற்கு ஒட்டு மொத்தமாக பாதகம் விளைக்கக்கூடிய உற்பத்தி சாதனங்கள் குவிந்து போவதைத் தடுக்க வேண்டும். அப்படிச் செய்யா விட்டால் தனிப் பட்டவர்கள் தங்கள் இஷ்டம்போல் விலைகளை உயர்த்தவும் குறைக் கவும் ஏதுவாகும். அது அபாயகரமான வகையில் உற்பத்தி சாதனங்கள் குவிந்து போனதாக ஆகிவிடும். இன்றைக்கு நிலம் என்கிற உற்பத்தி சாதனம் ஒரு சிலர் கையில் குவிந்து போயிருப் பதனால், என்ன ஏற்படுகிறது? உணவுப்பண்டங்களின் விலைவாசி கள் தாறுமாறாக ஏறுகிறது. அதனால், திட்டத்தின் எல்லா இலக்கு களுக்கும் ஆபத்து ஏற்படுகிறது. மனித இயந்திரத்திற்கே ஆபத்து ஏற்படுகிறது. அவகாசம் இல்லாததால் பல விவரங்களை யும் கொடுக்க முடியவில்லை. சிலவற்றை மட்டும் சொல்லுகிறேன். மொத்தம் 2,50,00,000 ஏக்கர் சாகுபடி நிலத்தில், 41,24,000 ஏக்கர் பெரிய நிலச்சுவாந்தார்கள் கையில் குவிந்திருக்கிறது. இதெல்லாம் அரசாங்கம் கொடுத்த கணக்குத்தான். நாங்களாகக் கற்பனை செய்யவில்லை. அதிகமாகத்தான் இருக்கும். இது 1959-ம் வருஷத் தில் எடுத்த கணக்கு. ஆகவே இப்படி அதிகமாகக் குவிந்து இருக்கிறது. ஆகவே அந்த மாதிரி ஒரு சிலர் கையில் குவிந்தி ருக்கும், சமுதாயத்திற்கு ஊறு விளைவிக்கக்கூடிய அளவில் இருக்கும் நிலத்தை முதலிலே பிரிவினை செய்யவேண்டும், அதை பரவலாக விவசாயிகளுக்குக் கொடுக்க வேண்டும் என்ற நோக்கத் தோடு இது கொண்டு வரப்படவேண்டும். இது விவசாயிகளின் தனிப்பட்ட கோரிக்கையல்ல. அது யாருடைய சொத்தையும் பறி முதல் செய்யக்கூடிய காரியமும் அல்ல. தேசம் பூராவும், எல்லா மக்களும் தங்கள் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்ற உயர்ந்த லட்சியத்தோடு கொடுக்கப்படும் தேசியக் கோரிக்கை இது. ஒரு ஜாதிக்காகவோ, அல்லது மதத்திற் காகவோ, ஒரு பகுதியினருக்காகவோ செய்யப்படுவதில்லை. இது எல்லா கட்சிகளுக்கும் பொதுவான பிரச்சினை. இதை ஒரு கட்சிப் பிரச்சினையாகக் கொள்ளக் கூடாது. இது ஒரு கட்சிப் பிரச்சினை அல்ல. மதப் பிரச்சினையோ அல்லது ஜாதிப் பிரச்சினையோ அல்ல. இது ஒரு தேசியப் பிரச்சினை. வருங்காலத்திலே தேசிய அடிப் படையிலே நிர்ணயிக்கப்படவேண்டிய ஒரு கொள்கையாக இது இருக்கிறது. ஹார்பர் தொழிலாளர்களுக்கு இருக்கக்கூடிய ஒரு

[Sri M. Kalyanasundaram] [30th August 1961

உணர்வு கூட நமது நிதி அமைச்சர் அவர்களுக்கு இல்லை. விவசாயிக்கு நிலத்தை கொடுத்தால்தான் தங்களுக்கு உணவு கிடைக்கும் என்ற நிலைமையை அவர்கள் புரிந்துக் கொண்டிருக்கிறார்கள். விவசாயிகளுக்கு நிலம் வழங்க வேண்டும் என்பதை நகரத்தில் இருக்கக்கூடிய தொழிலாளிகளும் படித்தவர்களும் ஆதரிக்க வேண்டும். இது ஒரு பொதுப் பிரச்சினை. கம்யூனிஸ்ட் கட்சியின் கண்ணோட்டத்திலிருந்து இதை நான் பார்க்கவில்லை. நில உரிமையைப் பொறுத்த வரையில் நாம் கொடுத்துள்ள வாக்குறுதி என்ன என்ற அடிப்படையில் பார்க்கும்பொழுது இது மிகவும் மோசமான சட்டம் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. திட்டத்தில் சொல்லப்பட்டிருக்கும் நோக்கம் நிறைவேறுவதற்கு இந்த மசோதா உதவுமா? அதற்கு நேர்மாறான நிலையைத்தான் கிராமப்புறத்திலே சிருஷ்டித்து இந்தத் திட்டத்தையே உலை வைக்கக்கூடிய ஒரு அபாயத்தை மூன்றாவது திட்ட காலத்திலே ஏற்படுத்தப்போகிறோம் என்பதை சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

இந்த மசோதாவிலே குத்தகை நிலத்தைப்பற்றி என்ன சொல்லியிருக்கிறார்கள் என்பதை முதலிலே பார்க்கலாம். பிறகு உச்ச வரம்பு விஸ்தீர்ணத்தைப்பற்றி நான் பேச விரும்புகிறேன். நிலப் பிரபுக்களுடைய நிலத்தில் குத்தகைக்காகவும் வாரத்திற்காகவும் நிலத்தை விடக்கூடிய பிரச்சினை விவசாயிகளின் பிரச்சனைகளிலே கேந்திரமானதாக இருந்து வருகிறது. 1955-ல் குத்தகை நிலத்திலிருந்து விவசாயிகளை வெளியேற்றக்கூடாது என்கிற ஒரு சட்டத்தை நிறைவேற்றினோம். திட்டக் கமிஷன் முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலிருந்தே விவசாய நிலத்தைப் பற்றிய உறவு முறையை மாற்றியமைக்க வேண்டியதுதான் திட்டத்தின் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்று சொல்லி வந்திருக்கிறது. திட்டம் என்பது ஒரு Superstructure அஸ்திவாரம் சரியாக அமைக்கப்பட வேண்டும். அஸ்திவாரம் என்பது விவசாயத்திலுள்ள உறவு முறை. அதை திருத்தி அமைக்க வேண்டும் என்பதை குறிக்கோளாக வைத்து அவர்கள் யோசனை சொல்லியிருக்கிறார்கள். திரும்பத் திரும்ப ஒவ்வொரு திட்டத்திலேயும் பார்த்தால் இது வலியுறுத்தப்பட்டு வந்திருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையிலே 277-வது பக்கத்திலே எழுதியிருப்பதை அமைச்சர் அவர்கள் படித்துப் பார்க்க வேண்டும்.

"Security of tenure and reduction of rents are the first stage in tenancy reform; the goal is to confer rights of ownership on as large a body of tenants as possible. In the Second Plan it was suggested that each State should have a programme for converting tenants of non-resumable areas into owners and putting an end to vestiges of the landlord-tenant relationship".

இந்த உறவு முறை மிகவும் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. அதிலே சென்னை ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் காம்ப்ளிமெண்டும் கொடுத்திருக்கிறார்கள்.

**"In Madras, steps in favour of ownership rights for tenants have not yet been initiated".**

குத்தகை சாகுபடியாளருக்கு எந்த அளவுக்கு சாத்தியமோ அந்த அளவுக்கு நிலத்தை சொந்தமாக்கக்கூடிய முயற்சி அவசியம் என்பதை வலியுறுத்தி திரும்பத் திரும்ப சொல்லப்பட்டிருக்கிறது. எல்லாவற்றிலும் முதன்மையாக நிற்கும் சென்னை ராஜ்ஜியம் இதிலே இன்னும் ஆரம்ப முயற்சி கூட எடுக்கவில்லையென்று சொல்லியிருக்கிறார்கள். இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்கு போய் விட்டு வந்திருக்கிற நிலைமையிலே இதை திட்டக் கமிஷன் பார்த்திருந்தால் அவர்கள் ஆத்திரப்படுவார்கள். திட்டத்தை தயார் செய்தவர்கள் உண்மையாக இருந்தால் நிச்சயமாக ஆத்திர மடைவார்கள். இந்த மசோதாவிலுள்ள 62-வது பிரிவின்படி ஐந்து ஸ்டாண்டர்ட் ஏக்கரிலிருந்து 20 ஏக்கர் வரைக்கும் வைத்தி ருக்கக்கூடியவர்கள், 3 ஏக்கரா வரையிலும் உடனடியாக சொந்த சாகுபடி என்கிற பெயரால் எடுத்துக்கொள்ளமுடியும். ஆகவே இந்தச் சட்டம் அமுலுக்கு வந்து நோட்டிஸை செய்தவுடனே என்ன ஆரம்பமாகும்? சிறிய நிலச்சுவானதார்களையும், குடியான வர்களையும் மோத விடுவார்கள். இதுவா சிறிய நிலச்சுவான்தார் களுக்கு செய்யக்கூடிய நன்மை என்று நான் கேட்கிறேன். சென்னையிலே வேலை செய்யக்கூடிய குமாஸ்தாக்கள், படித்த நடுத் தர வர்க்கத்தினர், நாதியில்லாமல் தவிக்கும் விதவைகளுக்கு இவர் களுக்கெல்லாம் உதவி செய்யக்கூடிய முறையிலே என்று பேசப் படுகிறது. உடனடியாக 3 ஏக்கர் நிலத்தை சொந்த சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளலாம் என்றிருக்கிறது. இரண்டு வருஷங்கள் ஆன பிறகு என்ன நிலைமை ஏற்படும்? எந்த நிலப்பிரபுவும் எவ்வளவு நிலம் வைத்திருந்தாலும், சொந்த சாகுபடிக்கு 5 ஏக்கர் எடுத்துக்கொள்ளலாம் என்றிருந்தால் என்ன நிலைமை ஏற்படும் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அடுத்த ஐந்து வருடக் காலத்திற்குள் குத்தகை சாகுபடி செய்யக்கூடிய வர்க்கமே இல்லாமல் அழிந்துவிடும். அவர்கள் நிலமெல்லாம் நிலச்சுவான் தார்கள் கையில் போய்விடும் என்பதற்கு வேறு சான்று வேண்டிய தில்லை. இன்கம் டாக்ஸ் செலுத்தபவர்கள் அப்படி எடுத்துக் கொள்ளக் கூடாது என்று போட்டிருக்கிறோம் என்று அமைச்சர் அவர்கள் சொல்லக்கூடும். 1955-ம் வருடத்திலிருந்தே எச்சரிக்கை கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது. எந்த நிலப்பிரபு இன்னும் தன் வீட்டிலே உள்ள ஒவ்வொருவருக்கும் 30 ஸ்டாண்டர்ட் ஏக்கர் வீதம் பிரித்து ரிஜிஸ்டர் பண்ணாமல் இருக்கிறார்? பொறுக்குக் கமிட்டிக்கு போய்விட்டு வந்த பிறகு நிலைமை என்ன? அப் பொழுது 6—4—1960-க்குள் ரிஜிஸ்டர் செய்யப்பட்டு இருக்க வேண்டுமென்றிருந்தது. இப்பொழுது நிலைமை என்ன? 6—4—1960-க்கு முன்னால் தேதி போட்டு முத்திரை ஸ்டாம்பு காகிதம் வாங்கியிருந்தால் போதும். இந்தச் சட்டம் வந்த பிறகு எழுதிக் கொண்டு அப்புறம் ரிஜிஸ்டிரார் ஆபீஸில் போய் பதிவுச் செய்தால் கூட பரவாயில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு குடும்பத்திலே எத்தனை பேர் இருந்தாலும் ஒருவர்தான் இன்கம் டாக்ஸ் செலுத்துவார். அவர்கள் எல்லாம் ஆளுக்கு ஐந்து

[Sri M. Kalyanasundaram] [30th August 1961

ஸ்டாண்டர்ட் ஏக்கர் நிலத்தை சொந்த சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளலாம் என்ற உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. அந்த அளவுக்கு இந்த சட்டம் அமுலுக்கு வருகிற தேதியிலிருந்து சொந்த சாகுபடி என்ற பெயரால் உழவர்கள் நிலத்தை இழக்கக் கூடிய நிலைமை ஆரம்பமாகும். உழவர்களுக்கு நிலத்தை சொந்த மாக்கக்கூடிய முயற்சி எதுவும் இந்த மசோதாவிலே இல்லவே இல்லை. அந்த மாதிரி ஒரு எண்ணம் இருப்பதாகவே தெரியவில்லை. உழவர்களுக்கு நிலத்தை சொந்தமாக்க வேண்டுமென்பதுதான் திட்டங்களின் நோக்கம் என்று திட்டக் கமிஷன் சொல்லியிருக் கிறார்கள். அப்படி டெனன்ட்களுக்கு சொந்தமாக்கிவிட்டு குத்தகை சாகுபடியாளரிடமிருந்து பணத்தை வசூல் பண்ணி நேரடியாகக் கொடுத்தாலும் சரி, அல்லது அவர்களே நேரடியாக கொடுத்தாலும் சரி, அல்லது அரசாங்கம் நஷ்ட ஈடாக கொடுத் தாலும் சரி. இந்த மூன்று முறைகளிலே உழுபவனுக்கு நிலத்தை சொந்தமாக்க வேண்டுமென்று இந்த திட்டக் கமிஷன் கூறி யிருந்தும் கூட உழுபவனுக்கு நிலம் சொந்தமாக்கப்படவில்லை. 1960-ல் என்ன நிலைமை இருந்ததோ அதே நிலைமையாவது இருக்குமாவென்று பார்ப்போம். கல்டிவேட்டிங் டெனன்ட்ஸ் புரொடக்ஷன் சட்டம், நியாய வாரச் சட்டம் இவைகளிலே கொடுக்கப்பட்டிருக்கக்கூடிய உரிமைகள் கூட இந்த மசோதாவினால் பறிக்கப்படுகின்றன என்பதைத்தான் நாம் காண்கிறோம். இதைப் பற்றி நான் பொறுக்குக் கமிட்டியிலே அமைச்சர் அவர்களிடத்தில் சொன்னேன். போகப் போக பொறுக்குக் கமிட்டியிலே என் போன்றவர்களுக்கு உற்சாகமே போய்விட்டது. நான்கு அமைச் சர்கள்—உள்துறை அமைச்சர், நிதி அமைச்சர், வருவாய் அமைச்சர், தொழில்துறை அமைச்சர்—இருக்கிறார்களேயென்று நான் முதலிலே சந்தோஷப்பட்டேன். மந்திரி சபையிலேயே பாதி இந்தக் கமிட்டியிலிருக்கிறது, வெகு சுலபமாக முடிவுகள் எடுக் கலாம் என்று நினைத்ததற்கு மாறான நிலைமை ஏற்பட்டது. எதற் கெடுத்தாலும் "நீங்கள் வேண்டுமானால் மினிட்ஸ் ஆப் டிசென்ட் கொடுங்கள், இதை உங்கள் பிரசாரத்திற்காக வைத்துக்கொள்ளுங் கள்" என்று அடிக்கடி சொன்னார்கள். ஆதலால் அங்கே பேசிப் பயன் ஒன்றும் இல்லை என்ற நிலைமை ஏற்பட்டது. ஒரு ஸ்டாண் டர்டு ஏக்கர் மிச்சம் வைக்கவேண்டும். பர்சனல் கல்டிவேஷன் என்று நிலத்தை பிடுங்கிக்கொள்ளும்போது ஒரு சிறு துண்டாவது அவனிடத்தில் வைப்பதற்கு இடம் இருக்கவேண்டும். ஆகவே ஒரு ஸ்டாண்டர்டு ஏக்கராவது குடியானவனிடம் விட்டுவிட்டு மிச்சம் இருப்பதை மீட்டுக்கொள்ளலாம் என்றேன். அதற்கு கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொடுத்த பதில்தான் மிகவும் விசேஷமாக இருக்கிறது. அது இன்னும் என் நினைவில் இருக்கிறது. "என்னுடைய நோக்கமும் உன்னுடைய நோக்கமும் ஒன்றுதான். நீயும் டெனன்ட்ஸ் என்றே இருக்கக் கூடாது என்கிறாய். நானும் இருக்கக் கூடாது என்கிறேன். நீ மிராசுதார்களிடத்தில் உள்ள நிலத்தைப் பிடுங்கி இவர்களிடத்தில் கொடுத்து டெனண்ட்ஸ்

11-30 a.m.

என்றே இனி இல்லாமல் செய்துவிடவேண்டும் என்கிறாய். நான் இவர்களிடம் இருக்கும் நிலத்தைப் பிடுங்கி மிராசுதார்களிடமே கொடுத்து டெனண்ட்ஸ் இல்லாமல் செய்துவிடுகிறேன். அவ்வளவு தான் வித்யாசம்'' என்கிறார். இப்படி எங்கள் இரண்டு பேர்களுக்கும் உள்ள வித்யாசத்தை மிகத் தெளிவாக எடுத்துச் சொல்லிவிட்டார்கள். இதுதான் திட்டக் கமிஷன் கொள்கையா? காங்கிரஸ் கமிட்டியின் கொள்கையா? அல்லது கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய மிக விசேஷமான கொள்கையா என்பது புரிந்துகொள்ள முடியாமல் இருக்கிறது. மத்திய சர்க்காரோ, திட்டக் கமிஷனோ இந்தக் கருத்தைப் புரிந்து கொண்டார்களா? அல்லது எல்லோருமே சேர்ந்து இப்படி ஒரு நாடகம் நடத்துகிறார்களா? (ஸ்ரீ பி. ஜி. கருத்திருமன் :—ஆர்டர் ஆர்டர்) நான் இங்கே நாடகம் ஆடுகிறார்கள் என்று சொல்லவில்லை. வெளியில்தான்—அதுவும் ஜாக்கிருதையாகச் சொன்னேன். சபையில் நடிப்பதாகச் சொல்வதுதான் குற்றம். ஆனால் வெளியில் ஒரு அமைச்சர் உழவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க, நிலம் அளிக்க சட்டம் கொண்டுவரப்படும் என்கிறார். இன்னொரு அமைச்சர் நிலப் பிரபுக்களிடத்தில் உங்களுக்கு இப்படி பாதுகாப்பு அளிக்கவே நாங்கள் விரும்புகிறோம்—இல்லாவிட்டால் பெரிய ஆபத்து ஏற்பட்டுவிடும் என்று சொல்கிறார்கள். இப்படி பேசி என்ன பலன் ஏற்படப்போகிறதென்றால் நிலவெளியேற்றம் தான் ஆரம்பமாகும் என்பதை இப்போதே எச்சரிக்கை செய்கிறேன்.

அடுத்தது டெனண்ட்சுக்கு எத்தனை நிலம் கிடைக்கும் என்று இங்கே சொல்லப்படவில்லை. 1959-ம் வருஷத்திய கணக்குப்படி இரண்டு லட்சத்து எண்பத்திரண்டாயிரம் ஏக்கரா நிலம் விவசாயிகளுக்கு நிலம் இல்லாதவர்களுக்குக் கிடைக்கலாம் என்று ப்ளானிங் கமிஷனுக்கு கணக்குக் கொடுத்திருக்கிறார்கள். குத்தகைதாரர்களிடம் 24 லட்சத்து 87 ஆயிரம் ஏக்கரா இருப்பதாகக் கணக்கு அனுப்பியிருக்கிறார்கள். 24 லட்சத்து 87 ஆயிரம் ஏக்கரா அன்றைக்கு இருந்தது என்று சொன்னால் ஸி.டி.பி. ஆக்ட், பார் ரென்ட் ஆக்ட் இவைகள் எல்லாம் வந்த பிறகு பலர் வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். இன்றைக்கு அதில் எவ்வளவு குத்தகை இருக்கிறது என்று பார்க்கவேண்டும். தேவஸ்தான, மடாலய நிலையங்களுக்கு இப்போது விலக்குக் கொடுத்துவிட்டோம். இனி மிச்சம் எவ்வளவு இருக்க முடியும்? முன்பே இரண்டு லட்சத்து எண்பத்திரண்டாயிரம் ஏக்கரா என்றால்—இப்போது பிரித்துக்கொடுக்க ஒரு சென்ட் நிலம் கூட இருக்காது. ஆகவே பிரித்துக்கொடுக்க வேண்டிய தொந்தரவே இதில் இருக்காது. இது அவ்வளவு தந்திரமாகத் தயாரிக்கப்பட்ட சட்டம். தந்திரமாக என்று வெகு ஜாக்ருதையாகச் சொல்கிறேன். இன்னும் சொல்லப்போனால் ஏமாற்றுகிற முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிற சட்டம் என்று சொல்லவேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக எல்லாவற்றுக்கும் விதிவிலக்கு அளிக்கப்

பட்டாகிவிட்டது. நண்பர் கருத்திருமன் அவர்கள் பேசுகிற பொழுது திறமையான பண்ணைகளுக்கு விலக்கு அளிக்க வேண்டாமா? விலக்கு அளிக்கவேண்டுமென்று யாரும் பேச வில்லையே" என்று சொன்னார்கள். அவர்களையே மனதில் வைத்துக்கொண்டு பேசினார்களோ என்னமோ. (ஸ்ரீ பி. ஜி. கருத்திருமன் :—இல்லை இல்லை) அவர்களிடத்தில் இருந்து இப்போதே ஒரு சென்டு கூடக் கிடைக்காது என்பது தெரியும். திறமையான பண்ணையும் கூடச் சேர்த்திருக்கலாம். அதையும் சேர்த்திருந்தால் இந்தச் சட்டத்திற்கே அவசியம் இல்லை. இந்தச் சட்டமே வராது இருந்தால் ஒருவிதத்தில் நன்மையாக இருந்திருக்கும். இவ்வளவு விதிவிலக்குக் கொடுத்த பிறகு நிலச்சுவாந்தார்கள் கொஞ்சங் கூட பயப்படாமல் தைரியமாக இருக்கலாம். "இத்தகைய சட்டத்தைத் தயாரித்துக்கொண்டு வந்தீர்களே சபாஷ்......... நீங்களே தொடர்ந்து பதவியில் இருக்கவேண்டும்" என்று அவர்கள் சொல்வார்கள். இருந்தாலும் கோழிச் சண்டைதான் போடுவார்கள். நிலப்பிரபுக்களும் சரி, சுதந்திராக் கட்சிக்காரர்களும் சரி வெளியில் இருந்து எழுப்பிக்கொண்டிருக்கின்ற எதிர்ப்பு எல்லாம் இதற்கும் மேலாக இவர்கள் போய்விடக்கூடாது என்பதற்காகத்தான். அவர்கள் இத்தகைய எதிர்ப்பினாலேயே காங்கிரஸ் கட்சிக்குப் பலம் தேடித் தருகிறார்கள். கனம் ராஜாஜி அவர்கள் எப்போதுமே நண்பர்களுக்கு நன்மை செய்வதைவிட எதிர்ப்பவர்களுக்குத்தான் அதிக நன்மை செய்வார்கள். கம்யூனிஸ்டுக் கட்சி வேண்டுமானால் சேராது. வேடிக்கை பார்ப்பதற்காக மாறான கருத்துக்களை வெளியிட்டு எதிர்க்கிறார்களே தவிர உண்மையில் அதன்படி நடப்பதற்கு மாறுபட்டவர்கள். அவர்கள் செய்கிற பிரசாரம் ஒரு வகையில் காங்கிரசுக்கு ஒரு பலத்தைத்தான் தேடித்தருகிறது. இப்போது அர்த்தமற்ற வகையில் தரப்படுகிற விதிவிலக்கு எல்லாம் கூலி விவசாயிகளுக்கும், நிலச்சொந்தக்காரர்களுக்குமிடையே வீணை தகராறுகளைத்தான் உண்டாக்கும். மடங்கள், தேவஸ்தானங்கள் சம்பந்தப்பட்டமட்டில் வேறு ஒரு சட்டம் கொண்டுவரப்போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். அந்தச் சட்டம் எப்படி வருமோ தெரியாது? அரசியல் சட்டத்தின்மேல் பழி போட்டுவிட்டார்கள். அதுதான் தடையாக இருக்கிறது என்றால் அதைத் திருத்த தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம். அரசியல் சட்டம் 26-வது பிரிவு "அட்மினிஸ்டர் ப்ராபர்டி அக்கார்டிங் டு ஆக்ட்" என்றுதான் இருக்கிறது. இந்தச் சட்டப்படி அதை நிர்வகிப்பது என்றால்— அதில் ஒன்றும் தவறுதல் இருப்பதாகத் தெரியவில்லை. இப்படி விலக்கு அளித்திருப்பதனால் நன்மை வருமோ, தீமை வருமோ, பொறுத்திருந்தே பார்க்க வேண்டும்.

சீலிங் ஏரியா ஒரு நபருக்கு 30 ஸ்டாண்டர் ஏக்கர். ஒரு குடும்பத்திற்கு 30 தான் என்றாலும் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டிருந்தாலும் ஓரளவு சரியாக இருக்கும் என்று கருதலாம். அது ஒரு குடும்பத்திற்கு அல்ல. இந்து சொத்துரிமை சட்டப்படி மைனர் குழந்தைகள் கூட சொத்து வைத்துக்கொள்வதற்கு

உரிமை உண்டு. 1960-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 6-ந் தேதிக்குப் பிறகு கூட முன்பே வாங்கி வைத்துள்ள பத்திரத்தில் ஒருவருக்கு 30 ஏக்கர் என்று மைனர் குழந்தைகளுக்குக் கூட எழுதி வைக்கப் பட்டிருக்கிறது. பிறகு கூட ரிஜிஸ்ட்ரேஷன் ஆகியிருக்கிறது. ஒரு நிலச்சுவாந்தார் பொறுக்குக் கமிட்டியில் சாட்சி சொல்லும்போது திட்டவட்டமாக உங்களுக்கு ஒரு சென்ட் நிலமாவது கிடைக்குமா என்று சவால் விட்டிருக்கிறார். நாங்களும் எழுதி வைத்திருக் கிறோம். ஆயிரத்தில் ஒருவன் ஏமாந்தவனாகயிருக்கலாம். அவர் களை பீனலைஸ் செய்யாதீர்கள். 6-ம் தேதிக்கு முன் முத்திரைக் காகிதம் வாங்கி வைத்துக்கொண்டு எழுதி இரண்டு மாதங்கள் சென்று ரெஜிஸ்தர் செய்தாலும் அது செல்லும் என்றிருக்கிறது. இப்படி ஒரு சட்டம் இருக்குமா? சட்டம் இயற்றுவதற்கு முரணான வகையில் இது அமைந்திருக்கிறது. சட்டத்திற்கு எதிரான முறையில்தான் இது செய்யப்பட்டிருக்கிறது. இது ஒரு நாணயக் குறைவான திருத்தம் என்பதுதான் என் அபிப்பிராயம். பின், ஸ்டாண்டர்ட் ஏக்கர் செலக்ட் கமிட்டிக்குப் போன பின் விஸ்தீர்ணம் அதிகமாகியிருக்கிறது. ஸ்டாண்டர்ட் ஏக்கர் கணக்கில் சொல்லிவிட்டால் 30 ஸ்டாண்டர்ட் ஏக்கர் என்று சொல்லி விடலாம். காவேரிக்கரை, தாம்பரபரணி கரைகளில் இருக்கக்கூடியவர்களுக்கு 10 ரூபாய்க்கு மேல் செலுத்தக்கூடியவர் களுக்கு 30 ஸ்டாண்டர்ட் ஏக்கர் என்றும், புஞ்சை நிலம் வைத்தி ருப்பவர்களுக்கு தண்ணீர் தீர்வை அதில் சேராது, நிலத் தீர்வை மட்டும் சேரும், அதற்கு 30 ஏக்கரிலிருந்து 120 ஏக்கர்வரை ஒவ் வொருவரும் வைத்துக்கொள்ளமுடியும். ஏப்ரல் 6-ம் தேதிக்கு முன்னால் ரெஜிஸ்டர் செய்யாமல் இருந்தால் அவர்கள் ஏமாற்றம் அடைந்தவர்களாவார்கள். அப்படி வரும்போது, கிருஸ்தவர்கள், முஸ்லீம்ஸ் இவர்கள் ஏமாற்றப்படுவார்களே அவர்கள் உரிமையை பாதுகாக்க வேண்டுமென்று கிளர்ச்சி செய்ததன் பேரில் ஒவ்வொரு வரும் பத்து ஏக்கர் வைத்துக்கொள்ளலாம் என்று செய்திருக் கிறார்கள். பாகப் பிரிவினையாகாத குடும்பம் இதில் சிக்கினாலும் தனித்தனியாக பத்து ஏக்கர் வைத்துக்கொள்ளலாம். முன்பு ஸ்திரீதன சொத்திற்கு மட்டும் பத்து ஏக்கர் வரை பாதுகாப்பு இருந்தது. இப்பொழுது ஆண் பிள்ளைகளுக்கும் ஸ்திரீதனச் சொத்தை அரசாங்கம் பார்த்துக் கொடுக்கிறது. ஒவ்வொருவரும் பத்து ஏக்கர் விதம் ஒரு குடும்பம் 60 ஏக்கர் வரை வைத்துக் கொள்ளலாம். அக்கிரமமான முறையில் பாகப்பிரிவினை செய்து கொண்டு ஊரை ஏமாற்றுபவர்களுக்கு இந்தச் சட்டம் உதவி செய்கிறது. ஒவ்வொரு குடும்பமும் 30 ஏக்கர் ஸ்டேண்டர்ட் விதம், மாக்ஸிமம் 60 ஸ்டேண்டர்ட் ஏக்கர் வரை வைத்துக் கொள்ள்லாம் என்பதற்காக இந்தச் சட்டம் கொண்டு வர வேண்டுமா? திட்டக் கமிஷன் இப்படிச் சொல்லியிருக்கிறார்களே, அதைச் செய்யவில்லையென்றால் நம் பேரில் குறை சொல்வார்களே என்பதற்காக இதைச் செய்தீர்களா? திட்டக் கமிஷனை ஏமாற்றுவது ஒருபுறமிருக்க, 1962-ல் தேர்தல் வருகிறது. அதில்

குடியானவர்களையும் ஏமாற்றலாம். 1962-ல் தேர்தல் கழிந்த பின் தான் இது அமுலுக்கு வரப் போகிறது, அப்பொழுதுதானே உண்மை, ரகசியம் தெரியப் போகிறது. முப்பது ஸ்டான்டேர்ட் ஏக்கர் என்று வைத்திருப்பது ரொம்பவும் அதிகம். அதைக் குறைக்க வேண்டும். பதினைந்து ஸ்டேன்டேர்ட் ஏக்கர் ஒரு குடும்பத்திற்கு இருக்கவேண்டுமென்பது நியாயம். சிலர், கம்யூனிஸ்ட் அங்கத்தினர் ஒருவர் 4,500, 5,000 ரூபாய் வருமானம் இருக்க வேண்டுமென்று சொன்னார்கள். ஆறாயிரம் ரூபாய் என்று வேண்டுமானால் வைத்துக்கொள்ளட்டும். அப்படி பாது காப்பு கொடுப்பதில் ஆட்பேணையில்லை. ஆனால் 15 ஸ்டாண்டர்ட் ஏக்கருக்கு மேல் வைத்திருப்பது வருமானம் மிக அதிகமாக வரக்கூடியதாகும். பதினைந்து ஸ்டான்டேர்ட் ஏக்கரில் வருடம் ஒன்றுக்கு 5,000 ரூபாய் வருமானம் வராது என்று சொல்வது சரியல்ல. அது, அரசாங்கப் புள்ளி விவரங்களுக்கே மாறானது. பதினைந்து ஸ்டான்டேர்ட் ஏக்கர் வைத்துக்கொண்டு நியாயமான அளவு ஒரு குடும்பம் சரிவர வாழ்க்கையை நடத்த முடியும். அப்படி ஒரு குடும்பத்திற்கு 15 ஸ்டாண்டர்ட் ஏக்கர் என்று திருத்தினால்தான் ஏதாவது மிச்ச நிலம் கிடைக்கும். இந்தச் சட்டம் அமுலாகும் தேதி குறைந்தது 1955-ல் இருந்து இருக்க வேண்டும். சிலர் 1957 என்று சொன்னார்கள். அதை ஒத்துக்கொள்வதில் ஆட்சேபணையில்லை. இந்தச் சட்டத்தை ஏமாற்றவேண்டுமென்ற நோக்கத்தோடு செய்யப்பட்டிருக்கும் பாகப்பிரிவினைகளை அங்கிகரிக்கக்கூடாது. வயது வந்த பிறகு, இயற்கையாக ஏற்பட்டிருக்கும் பாகப்பிரிவினைகளை அங்கீகரிக்க வேண்டும். அதை ஆட்சேபிக்கவில்லை. இந்தச் சட்டத்தை எதிர்பார்த்து சட்டத்தை ஏமாற்ற வேண்டுமென்ற நோக்கத்தோடு மைனர் குழந்தைகள் உட்பட எல்லோருக்கும் தனித்தனியாக பிரித்து மைனர்களின் கார்டியனாகயிருந்து நடத்தி, ஆதரைஸ்ட் ஆபீஸரிடம் தனித்தனியாக இருக்கிறது என்று கணக்கு கொடுப்பார்கள்—அத்தகைய மோசடிகளை நாம் அங்கிகரிக்கக் கூடாது. ஆதரைஸ்ட் ஆபீஸர் கணக்கு கேட்கும்போது பட்டா வேறு வேறாக மாற்றப்பட்டிருக்கும். ஆனால் ஒரே பண்ணையாகத்தான் இருக்கும். தானே இருந்து நிர்வகித்ததுபோக, கார்டியனாக இருந்து அவர்கள் அனுபவிக்கிறார்கள். திருத்தத்தின் விளைவு அது தான். பின், இனாம் நிலம் சம்பந்தப்பட்ட மட்டில் பெரும்பாலான இனாம்களிலிருந்து வெளியேற்றம் நடைபெறுகிறது. வெளியேற்றத்தைத் தடுக்கும் சட்டத்தை, குடியானவர்களுக்கு பட்டா அளிக்கும் சட்டம் வருவதாக வாக்குறுதி அளித்திருக்கிறார்கள். அதை சீக்கிரம் கொண்டு வரவேண்டும். 1955-லிருந்து இது அமுல் நடத்தப்படவேண்டுமென்று திருத்தம் செய்யப்பட வேண்டும். பதினைந்து ஸ்டாண்டர்ட் ஏக்கர் என்று விஸ்தீர்ணம் குறைக்கப்படவேண்டும். குடியானவர் ஒருவர் கூட நிலத்திலிருந்து வெளியேற்றப்படக்கூடாது. அதை உடனே தயார் செய்ய கஷ்டம் இருந்தால் மூன்று வருடத்திற்கு அப்புறப்படுத்தக்கூடாது

என்று சட்டம் போடுங்கள், மிச்சம் எவ்வளவு கிடைக்கிறது என்று பார்க்கலாம். அதை எப்படி கொடுக்கலாம் என்று பார்த்து முடிவு செய்யலாம். மூன்று ஏக்கர் வரை வைத்துக்கொள்ளலாம் என்று இருப்பதை அனுமதிக்கக்கூடாது. ஒரு குடியானவர்கூட வெளியேற்றப்படக்கூடாது என்ற முறையில் இது திருத்தப்பட வேண்டும். "கல்டிவேட்டிங் டெனன்ட்ஸ் ப்ரொட்டக்‌ஷன் ஆக்ட், பேர் ரென்ட் ஆக்ட்" இவைகளிலுள்ள குறைபாடுகளைக் கவனித்து, எவ்வளவு நிலத்தை இழந்திருக்கிறார்கள் என்றும் பார்த்து இவைகளில் உள்ள குறைபாடுகளைக் கவனித்து அச் சட்டங்களைத் திருத்தி புதிதாக ஒரு "டெனன்ஸி சட்டம்" கொண்டு வருவதற்குள்ள நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். இத் திருத்தங்களை செய்யாவிடில் இந்தச் சட்டத்தினால் ஒரு நன்மையும் ஏற்படாது. அதற்குப் பதிலாக காங்கிரஸ் அங்கத்தினர்கள் சொன்னதுபோல் ஒரு கலகம்தான் ஏற்படும். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் செலவு செய்தது, அதனால் கிராம அபிவிருத்தி, விவசாய அபிவிருத்தி போன்றவைகளில் எவ்வளவு பலன் எதிர்பார்க்கிறோமோ, உணவு உற்பத்தி பெருகவேண்டும், மக்கள் வாழ்க்கைத்தரம் உயரவேண்டும் போன்ற நோக்கங்கள் நிறைவேறாது என்பது மட்டுமல்ல. கிராமப்புறங்களில் விவசாயத் தொழிலாளர்கள், நிலப்பிரபுக்கள் இடையே தகராறு, நிலத்தை இழக்கும் குடியானவர்கள் நிலப்பிரபுக்களிடையே தகராறு என்று கிராமப்புறங்கள் சீர்கெட்டு அமைதிக்கு பங்கம் ஏற்பட்டு தகராறு தான் ஏற்படுமே தவிர குடியானவர்களுக்கு உதவி செய்யும் விதத்தில் இந்த மசோதா கொண்டு வரப்படவில்லை என்று கூறிக்கொண்டு இந்த அக்கிரமமான சட்டத்தை வாபஸ் பெற்றாவது நிறுத்திக் கொண்டு விடுங்கள் என்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* SRI V. K. RAMASWAMY MUDALIAR : தலைவர் அவர்களே, நிலவுடமை உச்சவரம்பு மசோதாவை முதலிலிருந்தே ஆட்சேபித்து வருபவர்களில் நானும் ஒருவன். இந்த மசோதா நிறைவேறினால் அநேகவித கெடுதிகள்தான் ஏற்படுமேயொழிய நன்மை ஒன்றும் ஏற்படாதென்று திட்டவட்டமாக நம்புகிறவர்களில் நானும் ஒருவன். சர்க்கார் கொடுத்திருக்கும் இந்த முகவுரையில் 39-வது ஆர்டிகிள்—அரசியல் சட்டத்தைப்பற்றி எழுதியிருக்கிறார்கள். மற்ற செக்‌ஷன்ஸ் 19 (f), 31 (2) இவைகளை எல்லாம் விட்டு விட்டார்கள் என்று நான் திட்டவட்டமாகச் சொல்ல முடியும். முதன் முதலாக இந்தச் சட்டம் மனிதனின் ஜீவாதார உரிமையைப் பறிப்பதாகும். "பண்டமென்ட்டல் ரைட்ஸ்"-ஐ பறிப்பதாகும். இது "எக்ஸ்ப்ரோபிரியேட்டரி", பறிமுதல் செய்யும் வகையில் ஏற்பட்ட ஒரு சட்டமாகும். கடைசியாக இது ஒரு ஏமாற்றத்தைக் கொடுக்கின்ற சட்டமாகவே இருக்கும். இந்த அடிப்படையில் ஒரு சட்டத்தை நாம் கொண்டுவந்து நிறைவேற்றப்போகிறோம். அரசியல் சட்டத்தின் விதிகளில் 19 (எப்) பிரிவைப் பார்த்தால் . . .

[Sri V. K. Ramaswamy Mudaliar] [30th August 1961

"All citizens shall have the right to acquire, hold and dispose of property".

என்றிருக்கிறது. அதைப்பற்றி சர்க்கார் கவனித்துப் பார்த்த தாகத் தெரியவில்லை.

அடுத்தபடியாக 31 (2)-வது பிரிவைப் பார்த்தால் . . .

"No property shall be compulsorily acquired or requisitioned save for a public purpose and save by authority of a law which provides for compensation for the property so acquired or requisitioned. . . ."

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன்படி பார்த்தால் இதில் என்ன பப்ளிக் பர்ப்பஸ் இருக்கிறது, ஒருவருடைய சொத்தை எடுத்துக்கொள்வதற்கு இதில் என்ன உரிமை இருக்கிறது என்பதைப்பற்றி யோசித்துப் பார்க்கவேண்டும். முக்கியமாக விவசாயம் என்பது இப்போது எங்கு பார்த்தாலும் ஒரு பெரிய பிரச்னையாக இருந்து கொண்டிருக்கிறது. காற்று, ஜலம் இவைகள் எல்லாம் ஒருவருக்குச் சொந்தமானது என்று சொல்ல முடியாது. அம்மாதிரி கூட்டத்தில் சேர்ந்தது நிலங்களும் என்பதுதான் அர்த்தமா என்பதையும் நாம் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். நிலம் என்று எடுத்துக்கொண்டால், ஒவ்வொருவரும் கஷ்டப்பட்டு சம்பாதித்து, பயிரிட்டு உற்பத்தி செய்து கொண்டிருக்கிறார்கள். இதைத் திடீரென்று எடுத்துக்கொள்வது சரிதானா என்பதைப்பற்றி நாம் ஆலோசித்துப் பார்க்கவேண்டும்.

(Deputy Speaker in the Chair.)

தவிரவும், இந்தச் சட்டம் நிறைவேறினால், எவ்வளவு ஏக்கர் நிலங்கள் மீதமாக வரும், இதிலிருந்து எத்தனை ஆயிரம் மக்களுக்கு நிலங்களைக் கொடுக்கலாம் என்பதைப் பற்றிய புள்ளி விவரங்கள் இதுவரையிலும் சர்க்கார் எடுத்திருப்பதாகத் தெரியவில்லை. நான் இதைப்பற்றி செக்ரடேரியேட்டில் பல ஆபீஸ்களிலும், கலெக்டர் ஆபீஸ்களிலும் விசாரித்ததுண்டு. ஆனால் ஒவ்வொரு மாவட்டத்திலும் இத்தனை ஆயிரம் ஏக்கர் நிலங்கள் மிச்சப்படும், இம்மாதிரியான சட்டம் நிறைவேறினால், எத்தனை ஆயிரம் பேர்களுக்கு நிலம் கிடைக்கும், புறம்போக்கு நிலங்கள், தரிசு நிலங்கள் இவைகள் எல்லாம் எத்தனை ஆயிரம் ஏக்கர்கள் கிடைக்கும் என்பதைப்பற்றியெல்லாம் சர்க்கார் திட்டவட்டமாக நாளதுவரையில் எந்தவிதமான புள்ளிவிவரமும் எடுக்கவில்லை என்று தெரிகிறது. நிலம் இல்லாதவர்கள் இந்த ராஜ்யத்தில் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள், தரிசு நிலங்கள் எத்தனை லட்சம் இருக்கின்றன, இந்தச் சட்டம் நிறைவேறினால் உபரி நிலமாக எவ்வளவு கிடைக்கும் என்பதைப்பற்றி நாளதுவரையில் புள்ளி விவரம் இல்லை. நண்பர் கல்யாணசுந்தரம் அவர்கள், இப்போது 30 ஏக்கர் என்று நிர்ணயித்திருப்பதை 15 ஏக்கர் என்று மாற்றிவிட்டால், ஏராளமான நிலங்கள் மிச்சப்படும் என்று சொன்னார். இவ்விதம் 15 ஏக்கர் என்று மாற்றி அமைத்தாலும்கூட,

கொஞ்சம்கூட மிச்சப்படாது என்பது என்னுடைய நம்பிக்கை. கண்டிப்பாக இந்தச் சட்டம் கொண்டு வந்த பின்னால் ஒரு ஏமாற்றம்தான் ஏற்படப்போகிறது என்பது என் அபிப்பிராயம். ஏதோ வோட்டு கேட்பதற்காக, தேர்தல் சமயத்தில், இவ்விதமாக ஒரு சட்டத்தை பாஸ் செய்து வைத்துவிடலாம், அதன் மூலம் மக்களுக்கு நிலங்களை எல்லாம் வினியோகித்துக் கொடுக்கலாம் என்று ஆளும் கட்சியினர் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள், ஆனால் இதில் ஒரு சென்ட் கூட வரப்போவதில்லை என்பதோடு மட்டுமல்ல, இதனால் ஒரு பெரிய ஏமாற்றத்தைத்தான் அடையப் போகிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். எங்கள் பக்கத்தில் "பார்மர்ஸ் ஃபோரம் (Farmers Forum) என்ற ஒரு ஸ்தாபனம் இருக்கிறது. இதிலிருந்து இரண்டு வருடங்களுக்கு முன்னால் ஒவ்வொரு இடத்திலும் எவ்வளவு புறம்போக்கு நிலம் இருக்கிறது என்பதற்குப் புள்ளிவிவரம் எடுக்கப்பட்டது. இதன் படி சுமார் 30 லட்சம் ஏக்கர் புறம்போக்கு நிலங்கள் தமிழ் நாட்டில் இருப்பதாக கணக்கெடுக்கப்பட்டது. இந்த நிலங்களை எல்லாம் சர்க்கார் எடுத்து அதை சாகுபடிக்குக் கொண்டுவர வேண்டும். சர்க்கார் இதுவரை சிறிதளவு புறம்போக்கு நிலங்களை எடுத்து சாகுபடிக்குக் கொண்டுவந்திருப்பார்கள். அதைத்தவிர சாகுபடிக்குக் கொண்டுவராத நிலங்களை எல்லாம் எடுத்து, ஏழைகளுக்கு பங்கிட்டு கொடுக்கவேண்டும். ஏதோ இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவதற்கு ஆட்சேபனை சொல்லுவதினால், சமுதாயத்தில் ஒரு புரட்சிகரமான மாறுதல் வருவதை நான் வரவேற்கவில்லை என்று யாரும் எண்ணவேண்டிய தில்லை. ஆனால் இந்த மாதிரியான ஒரு சட்டம் வருவதினால் எந்த அளவுக்கு மக்களுக்குப் பிரயோசனம் ஏற்படும் என்பதைத் திட்டவட்டமாக அமைச்சர் அவர்கள் தங்கள் பதிலில் சொல்ல வேண்டும். அநீதியான ஒரு சட்டத்தைக் கொண்டுவரக்கூடாது, என்பதே ஒழிய புரட்சிகரமான ஒரு சட்டத்தைக் கொண்டு வந்தால், அதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. இம்மாதிரி செய்வதின் காரணமாக நிச்சயமாக உணவு உற்பத்தி பாதிக்கப் படும். பிளானிங் கமிஷனும் உணவு உற்பத்திக்குப் பாதகமாக இருக்கக் கூடியவைகளுக்கு எல்லாம் விலக்கு கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறது. நல்லபடியாக உணவு உற்பத்திச் செய்யும் பண்ணைகளுக்கு எல்லாம் விலக்கு கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இதையெல்லாம் நம்முடைய சர்க்கார் நிராகரித்து விட்டார்கள். ஆகவே நல்ல முறையில் செயலாற்றும் பண்ணைகளுக்கு விலக்கு கொடுக்காதது உணவு உற்பத்திக்குத் தடை ஏற்படும் என்பதை நான் திட்ட வட்டமாகத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இதில் காம்பன்ஸேஷன் கொடுப்பதில், பாதியை பாண்டாகவும் பாதியை ரொக்கமாகவும் கொடுக்கலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது மிகவும் அநியாயமான காரியம். ஒருவர் சொந்தமாக பாடுபட்டு சம்பாதித்த நிலங்களை

எல்லாம் எடுத்துவிட்டால், பின்னால் நல்ல முறையில் வேறு வியாபாரம் ஏதாவது செய்து தங்கள் வாழ்க்கையை நடத்துவதற்கு அவர்களுக்கு உடனடியாக பூரா தொகையும் கையில் இருக்க வேண்டும். ஆகவே மார்க்கட் வால்யூவுக்கு தகுந்த முறையில், உடனடியாக ரொக்கத் தொகையும் கொடுக்க வேண்டும். இது மிகவும் முக்கியமான அம்சம், இதைப்பற்றி சர்க்கார் சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். மேலும் இதற்காகக் கொடுக்கப்படும் பணத்தை வரிப்பணத்திலிருந்து எடுக்கக் கூடாது. சர்க்கார் யாருக்கு நிலத்தை எடுத்துக் கொடுக்கிறார்களோ, அவர்களிடமிருந்து பணத்தை வாங்கி நிலச் சொந்தக்காரர்களுக்கு கொடுக்கவேண்டும். இப்போதே ஒவ்வொரு வருடத்திலும் சர்க்கார் பத்து கோடி ரூபாய் வரையிலும் கடன் வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். அந்த முறையில் கடன் வாங்கிக் கொடுக்கலாம், அல்லது கூட்டுறவு சொசைட்டிகள் மூலமாக விவசாயிகளுக்கு நல்ல முறையில் கடன் கொடுத்து, நிலம் எடுப்பவர்கள் நிலத்திற்குள்ள ரூபாயை கொடுக்கக்கூடிய வகையில் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும், இதில் பெர்ஸனல் கல்டிவேஷனுக்காக (Personal Cultivation). தன்னுடைய பூரா நிலத்தையும் எடுத்துக்கொள்வதற்கு முழு சுதந்தரமும் நிலச் சொந்தக்காரருக்கு இருக்க வேண்டும். உடனே முழு நிலத்தையும் கொடுப்பதற்கு தடங்கல் ஏதாவது இருந்தாலும், பாதி அளவு நிலத்தையாவது எடுத்துக்கொள்வதற்கும், அதன்பின்னால் கொஞ்சம் கொஞ்சமாக பூரா நிலத்தையும் சாகுபடிக்கு எடுத்துக்கொள்வதற்கும் வழிவகை செய்து கொடுக்க வேண்டும். ஐந்து ஏக்கர், அல்லது மூன்று ஏக்கர் என்று இருந்தால், வருமான வரி செலுத்துகிறார் என்ற தட்டுத் தடங்கல் இல்லாமல், சாகுபடி செய்ய வேண்டும் என்று விரும்பினால் தங்களுடைய நிலத்தை எடுத்துக்கொள்வதற்கு வழியிருக்க வேண்டும். சர்க்கார் உத்தியோகத்தில் இருப்பவர்கள், சர்க்கார் உத்தியோகம் கழிந்த பின்னால் கிராமத்தில் போய் பயிர்த் தொழில் செய்யவேண்டும் என்று விரும்பினால், அவர்களுக்கு தங்கள் நிலத்தை ஒரு வருட காலத்திற்குள் சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளக்கூடிய வகையில் ஒரு ஏற்பாட்டை செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இதில் பலவிதமான கட்டுப்பாடுகளை ஏற்படுத்தக்கூடாது. முன்னால் தஞ்சாவூர் பண்ணையாள் சட்டம் கொண்டுவந்தபோதுகூட 6-2/3 எடுத்துக்கொள்ளலாம் என்று சட்டம் போட்டோம். அதையெல்லாம் இப்போது சிந்திக்க வேண்டும். நிலத்திற்கு உச்சவரம்பு ஏற்படுத்தும் போது, ஒருவன் ஒரு கிராமத்தில் ஒரு விவசாயிக்கு அடமானத்தின் பேரில் கொடுத்திருந்தால், பின்னால் தொகை வசூல் ஆகாததின் காரணமாக ஏலத்தில் வந்திருந்தாலும் அதைக் கட்டுப்படுத்தக்கூடிய வகையில் ஏலம் எடுக்கும்படியான தருணம் வந்த போதிலும், ஒரு வருட அல்லது ஆறு மாத காலத்திற்குள் பணம் அந்த நிலத்துக்கு வசூலிக்கக்கூடிய அளவில் விகிதவிலக்கு கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

12-00 noon.

"ஆதரைஸ்ட் ஆஃபீஸர்" (Authorised Officer) என்று போட்டிருப்பதில் அவர்களுக்கு நிறைய பவர்ஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. அது எவ்வளவு தூரம் நன்மையாக முடியும் என்று என்னால் சொல்ல முடியவில்லை. ஆதரைஸ்ட் ஆஃபீஸர்களுக்கு அதிகமாக பவர் கொடுக்காமல் கோர்ட்டுகளுக்குக் கொடுப்பது உசிதம் என்று நினைக்கிறேன்.

தவிர "கன்ஸாலிடேஷன் ஆஃப் ஹோல்டிங்ஸ்", (Consolidation of Holdings) அதாவது நல்ல நிலங்களை ஒரே இடத்தில் சேர்த்து நல்ல முறையில் சாகுபடி செய்ய ஒரு வகை செய்ய வேண்டும். அம்மாதிரியான கட்டம் ஒன்றும் இதில் இல்லை. அதற்கு ஒரு க்ளாஸ் ஏற்படுத்தி அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

அதுவும் தவிர இதில் முக்கியமான கட்டம் 30 ஸ்டாண்டர்ட் ஏக்கர் என்று போட்டிருப்பது என்னைப் பொறுத்தமட்டில் சில பிராந்தியங்களுக்கு 30 ஸ்டாண்டர்ட் ஏக்கர் போதாது. உதாரணமாக சேலம், வட ஆற்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களில் நல்ல நிலமாக இருந்த போதிலும், அவர்கள் ஒரு போகத்திற்கு மேல் அநேக பிராந்தியங்களில் சாகுபடி செய்ய முடியாது. அந்த நிலங்களை காவிரிப் பாய்ச்சலுக்கும், தாம்பிரபரணிப் பாய்ச்சலுக்கும், வைகைப் பாய்ச்சலுக்கும் ஒத்திட்டுப் பார்த்தால் ஏற்றத் தாழ்வு அதிகமாக ஏற்படும். அந்த மாதிரி பிராந்தியங்களுக்கு ஸ்டாண்டர்ட் ஏக்கரை அதிகப்படுத்த வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

ஸ்டாண்டர்ட் ஏக்கர் ரேட்ஸைப் பொறுத்த வரையில் குறைந்தது 15 ரூபாயாக இருக்கவேண்டும் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். 30 ஏக்கருக்கு 300 ரூபாய் மாத வருமானம் என்று போட்டு, வருஷம் ஒன்றுக்கு 3,600 ரூபாய் என்று கண்டிருக்கிறார்கள். இப்போது இருக்கும் முறையில் விலைவாசிகள் விஷம் போல் ஏறும் காரணத்தினால், பயிர்ச்செலவு அதிகமாக ஆகிக்கொண்டு போவதாலும் 3,600 ரூபாய் என்பது ரொம்பவும் குறைவு. அதைக் கொண்டு ஒருவன் ஐந்து பேர்களுடன் குடும்பம் நடத்துவது என்பது முடியாத காரியம் என்று நினைக்கிறேன். உதாரணமாக இந்தத் தருணத்தில் ஒன்று சொல்லவிரும்புகிறேன். அமைச்சர்கள் எல்லோருக்கும் மாதம் ஒன்றுக்கு 1,500 ரூபாய் சம்பளம் இருக்கும்போது, நிலம் வைத்திருப்பவர்களுக்கு மட்டும் மாதம் 300 ரூபாய் என்று ஏன் திட்டம் போட்டிருக்கிறார்கள் என்று கேட்க விரும்புகிறேன். இது ரொம்பவும் குறைவு. இதைக் கண்டிப்பாக உயர்த்த வேண்டும். இல்லையென்றால் நிலத்தை சாகுபடி செய்ய உற்சாகம் இருக்காது என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். பொருளாதார அடிப்படையில் ஒரு நபருடைய நிலவுடமை எவ்வளவு என்பதை கண்டிப்பாக நிர்ணயித்திருக்கவேண்டும்.

What is the economic holding ?

**Sri M. A. MUTHIAH CHETTIAR :** ஹண்ட்ரெட் ஏக்கர்ஸ்.

**Sri M. KALYANASUNDARAM :** அவருக்கு 1,000 ஏக்கர் இருந்தாலும் போதாது.

**Sri V. K. RAMASWAMY MUDALIAR :** அதைப்பற்றி சர்க்கார் திட்ட வட்டமாகப் பார்த்தார்களா என்றால் இல்லை. அதை நிர்ணயிக்கவேண்டும். 30 ஏக்கர் சாகுபடி செய்வதென்றால் பொருளாதார அடிப்படையில் நல்ல முறையில் செய்ய முடியுமா என்று பார்க்கவேண்டும். கண்டிப்பாகச் செய்ய முடியாது. பொருளாதார நிபுணர்களைக் கலந்து இதற்கு ஏதாவது முடிவு எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஒவ்வொரு பிராந்தியத்திலும் ஒரு ஏக்கருக்கு என்ன வரும் என்று பார்க்க வேண்டும். அநேக பிராந்தியங்களில் மழை சரியாக இல்லாத காரணத்தினால் பயிர்கள் சாவியாகிவிடுகின்றன, அல்லது அதிக மழை காரணமாக நீர்ச்சாவி ஏற்பட்டு உற்பத்தியாவதில்லை. இதையெல்லாம் பார்த்து திட்டவட்டமாக எப்படி உச்ச வரம்பு கட்டப்போகிறார்கள் என்று கேட்கிறேன்.

**Sri M. A. MUTHIAH CHETTIAR :** எவ்வளவு உச்சவரம்பு இருக்கவேண்டுமென்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

**Sri V. K. RAMASWAMY MUDALIAR :** குறைந்தது ஐம்பது ஏக்கராவது இருக்கவேண்டும் என்று சொல்லுகிறேன்.

இதிலே தோப்புகளுக்கெல்லாம் விலக்குக் கொடுத்திருக்கிறார்கள். அதிலே முக்கியமாக சவுக்கு, பழ வர்க்கங்கள் ஆகியவைகளுக்கெல்லாம் விலக்கு கொடுத்திருப்பதை வரவேற்கிறேன். முக்கியமாக சென்னை நகரத்தை எடுத்துக் கொண்டால் மட்டும், என்னிடம் புள்ளிவிவரம் இருக்கிறது, நாள் ஒன்றுக்கு சவுக்குக் கட்டை மட்டும் 1,000 டன் செலவாகின்றது. சவுக்கு சாகுபடி செய்தால் விலக்கு என்று இருந்த போதிலும் அநேகமாக எங்கள் பிராந்தியத்தில், செங்கற்பட்டு மாவட்டத்தில், திருவொற்றியூரிலிருந்து கடலூர் வரையில், பாண்டிச்சேரி ப்ராண்டியர் வரையில் வேறு ஒன்றும் விளையாது. மணற் பிரதேசத்தில் வேறு ஒன்றும் விளையாது. சவுக்குத்தவிர வேறு ஒன்றும் இல்லாது இருந்தாலும் உச்ச வரம்புச் சட்டத்தினால் அநேக நிலங்கள் பாதிக்கப்படும். சவுக்கு வைப்பதிலும் கஷ்டம் இருக்கிறது. இரண்டு வருஷம் அல்லது மூன்று வருஷம் ஏக்கர் ஒன்றுக்கு வருஷம் ஒன்றுக்கு 200 ரூபாய் அல்லது 300 ரூபாய் செலவு செய்து ஜலம் ஊற்றினால், அப்போது தான் விளையும். அப்படிக்கில்லாமல் திடீரென்று விளைந்து விடாது. அந்த மாதிரி பிராந்தியங்களுக்கு விலக்குக் கொடுக்கவேண்டும். ஆனால், எங்கு பார்த்தாலும் ஒரு பிரச்னை என்னவென்றால் நெய்வேலி நிலக்கரி வரப்போகிறது, பிரிக்கெட்ஸ் வரப்போகிறது என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்

கள். தொழில் அமைச்சர் அவர்களைக் கேட்டபோது, அங்கு உற்பத்தியாகும் நிலக்கரி ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸ், பெரிய இண்டஸ்ட்ரீஸ் ஆகியவைகளுக்குப் போதுமே தவிர அடுப்பு எரிக்கக் கொடுப்பது கஷ்டம் என்று சொன்னார்கள். உண்மை யாகவே சென்னை நகரத்தில் விறகுப் பஞ்சம் இருக்கிறது. அந்த மாதிரியாக சவுக்கு சாகுபடி செய்யும் நிலங்களுக்கு விலக்கு கொடுத்தால் விறகு உற்பத்தி அதிகமாகும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்போது மாட்டுப்பண்ணைகளுக்கும், பால் பண்ணைகளுக்கும் விலக்கு கொடுத்திருப்பதை வரவேற்கிறேன். அதே மாதிரித்தான் மறுமுறை சொல்லுவது என்னவென்றால் நல்லபடியாக நடை பெற்றுவரும் பயிர் பண்ணைகளுக்கும் விலக்களிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

நான் சொன்ன யோசனைகளை எடுத்துக்கொண்டு, இந்தச் சட்டம் ஒரு புரட்சிகரமான சட்டமாக இருந்தபோதிலும் அநீதியான முறையில் நிறைவேற்றுமல் நல்ல முறையில் நிறை வேற்றவேண்டும் என்று சொல்லிக்கொண்டு எனது வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* **THE HON. SRI M. A. MANICKAVELU** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மசோதா இங்கு நான்கு நாட்களாக விவாதிக்கப்பட்டு சுமார் 38-39 அங்கத்தினர்கள் இதிலே பேசி யிருக்கிறார்கள். இதிலே பலதரப்பட்ட அபிப்பிராயங்கள் சொல் லப்பட்டன. ஆனால் நான் இந்த மசோதாவை எந்த முறையிலே கவனிக்கிறேன் என்றால், விருப்பு-வெறுப்பு இல்லாமல், அரசியல் நோக்கம் இல்லாமல், தேர்தல் நோக்கம் இல்லாமல், "அப்ஸ்ட்ராக்ட் ஸென்ஸ்" என்ற முறையிலே, எதற்காக இந்த மசோதா, எந்த முறையிலே இது அமைய வேண்டும், எந்த நோக்கத்தோடு, எந்தக் கொள்கையைக் கொண்டு இந்த மசோதாவைக்கொண்டு வந்திருக்கிறோம் என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

நம்முடைய திட்டமெல்லாம் எதற்காக என்றால், நாம் இப் போது ஒரு புது இந்தியாவை உருவாக்குகிறோம். அப்படி புது இந்தியாவை உருவாக்குவதிலே நாம் முன்னேற்றம் அடைய வேண்டும் என்று சொல்லுகிறோம். பல பிரிவுகளில் முன்னேற்றம் அடையவேண்டும். அக்ரிகல்சுரல் செக்டார், இண்டஸ்ட்ரியல் செக்டார், கம்யூனிட்டி டெவலப்மெண்ட் ஆகியவைகள்தான் பெரிய பிரிவுகள். இந்த மூன்று பிரிவுகளும் அபிவிருத்தி அடைய வேண்டும். ஆக, ஏதோ நிலச்சட்டம் என்றால் அக்ரிகல்சுரல் செக்டாரை மாத்திரம் இழுத்து கீழே தள்ளிவிட்டால் இம்பாலன்ஸ் ஏற்பட்டுவிடும். மூன்றும் பாலன்ஸ்ட்டாக இருந் தால்தான் நாம் வைத்திருக்கும் கொள்கை நிறைவேறும். இந்த மூன்றையும் ஒத்திட்டுப் பார்த்து நல்ல வகையிலே சீர்திருத் தத்தை அமைக்க முயலவேண்டும். ஏதோ இந்த மசோதாவை ஓட்டுப் பிடிக்கத் தயார் செய்திருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்

கள். இப்போது ஓட்டுப் பிடிப்பதற்காக 40 வருஷத்திற்கு முன்னலேயே ஏற்பாடு செய்திருக்க முடியுமா? அப்போதிலிருந்தே இருப்பதால், ஓட்டுப் பிடிக்க என்று இப்போது வாதத்திற்குச் சொல்லிக்கொள்ளலாமே தவிர, அதில் அர்த்தம் இருப்பதாக இல்லை.

இதை ஒரு சட்டத்தாலோ அல்லது தீர்மானத்தாலோ நடத்திவிட முடியாது. சுமார் 20 வருஷ காலமாக ஒவ்வொரு சட்டமாக செய்துகொண்டு வருகிறோம். இது அநேகமாக கடைசியாக இருக்கும், இல்லாவிட்டால் "லாஸ்ட் பட்" ஒன்ளுக இருக்கும். அப்படியென்ருல் இன்னும் ஒன்று இருக்கிறது. ஆனல் இது கடைசி பட்சமாக வரக்கூடிய நிலச் சீர்திருத்தச் சட்டம். ஆரம்பத்திலே அதாவது 1936-லே இனம் ஆக்ட் என்று ஒரு சட்டத்தை பாஸ் செய்தோம். சில எஸ்டேட் அல்லாதவைகளை எஸ்டேட் என்று சொல்லி வந்திருக்கிறோம். பிற்பாடு 1947-லே ரெண்ட் ரிடக்ஷன் ஆக்ட் என்று ஒரு சட்டத்தைக் கொண்டுவந்து, தீர்வை அதிகமாக இருக்கிற காரணத்தாலே அந்தத் தீர்வையைக் குறைக்கவேண்டுமென்று அந்தச் சட்டத்தை பாஸ் செய்தோம். 1948-லே எஸ்டேட் அபாலிஷன் ஆக்ட் என்று ஒரு சட்டம் கொண்டுவந்து, அந்தச் சட்டம் பிரகாரம் பெரிய ஜமீன்களையெல்லாம் எடுத்துக் கொண்டோம். இதற்குப் பிற்பாடு 10 வருஷமாக இந்த சாகுபடியாளர்களின் நன்மைக்காக வேண்டி, 1952-லே தஞ்சை பண்ணையாள் பாதுகாப்புச் சட்டத்தையும், 1955-லே கல்டிவேஷன் டெணண்ட் ஆக்ட் என்ற சட்டத்தையும், 1956-லே பேர் ரெண்ட் ஆக்ட் என்று சட்டத்தையும் பாஸ் செய்துவிட்டு, இப்போது 1961-லே உச்ச வரம்பு சட்டத்தைக் கொண்டுவந்திருக்கிறோம். ஆகவே ஒன்றுமே செய்யவில்லை என்று சொல்வதற்கில்லை. படிப்படியாக செய்துகொண்டு வருகிறோம். ஆனல் இதிலே இன்னும் தீவிரமாகச் செய்ய வேண்டுமென்று சொல்கிருர்கள். இதிலே முக்கியமாக ஒன்றை கவனிக்க வேண்டும். மனிதன் வாழ்க்கையிலே உள்ள கால அளவு வேறு. அதே சமயத்தில் நாட்டினுடைய கால அளவு வேறு. பத்து வருஷம் மனிதன் வாழ்க்கையிலே வாழக்கூடியதை, நாட்டிற்கு ஒரு வருஷம் என்று கணக்கெடுத்துக் கொள்ளவேண்டும். இந்த முறையிலே இதைப் பார்த்தால் இதை நிதானம் என்று சொல்வதற்கில்லை. ஆகவே இதைப் படிப்படியாக 1936-லிருந்தே கொஞ்சம் கொஞ்சமாக செய்யக்கூடிய ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதை கவனிக்க வேண்டும்.

மறுபடியும் ஒன்று சொல்கிறேன். இப்போது ஓட்டுப் பிடிப்பதற்குத்தான் இந்தச் சட்டம் இப்படி கொண்டுவரப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. தமிழ் நாட்டிலே இருக்கிற மக்கள், அதுவும் கிராமத்திலே இருக்கிற மக்கள் அதிலும் விவசாயிகளை ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லி ஏமாற்றிவிட முடியாது. அவர்கள் மிகவும் புத்திசாலிகள். நல்ல காமன்சென்ஸ் உள்ளவர்கள். வேண்டுமானுல் எதிர்க் கட்சிக்காரர்கள் பிரசாரத்திற்கு வேண்டுமானல் இப்படிச் சொல்லிக்கொள்ளலாம். கடைசியில்

அவர்கள் நல்ல முறையில் முடிவெடுப்பார்கள். அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. அந்த முறையிலேயே இந்தச் சட்டம் கொண்டுவரப்படவில்லை. ஒரு கொள்கை, ஒரு அடிப்படையை வைத்து அதன்பேரிலேதான் இப்போது இந்தச் சட்டம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அப்படிச் செய்யும்போது பிரி ஆம்பிளையும் கொஞ்சம் மாற்றி அமைத்திருக்கிறோம். இதற்கு எதிர்க் கட்சித் தலைவர் அண்ணாத்துரை அவர்கள், ஏன் இதை மாற்றினீர்கள் என்று கேட்டார்கள். இதைப் பற்றி சட்ட ரூபத்திலே கொண்டு வரும்போது அவசியமான சில திருத்தங்கள் செய்யும்போது, இதுவும் கொஞ்சம் தேவைப்பட்டால் செய்திருக்கிறோம். இப்படி இருக்கும்போது ஏன் அறிஞர் இப்படிச் சொன்னார் என்பது எனக்குத் தெரியவில்லை. அரசாங்கம் செய்யவேண்டுமென்று கருதியதால் செய்தது என்பதைத் தவிர இதற்கு வேறு காரணம் சொல்லமுடியாது. எதிர்க் கட்சித் தலைவர் சொன்னார், இந்த மாதிரி நிலத்தை எடுப்பது பப்ளிக் பர்பஸாக இருக்கவேண்டு மென்று. இதற்கு அவர்கள் கான்ஸ்டிடியூஷனில் சில ஷரத்துக் களையெல்லாம் படித்தார்கள். இதையெல்லாம் வைத்துக் கொண்டு இந்தச் சட்டத்தை செய்தும், மேல்சபையிலே உள்ள சட்டத்தை நன்றாகத் தெரிந்தவர்கள்கூட இது நன்றாக விளங்க வில்லை என்று சொன்ன காரணத்தினாலே, இதை விளக்கமாக செய்ய ஏற்பாடு செய்திருக்கிறேன். இல்லாவிட்டால், அங்கத் தினர்கள் அவசரமாகவும், தீவிரமாகவும் செய்யச் சொன்னார்கள் என்று செய்துவிட்டால், பின்னால் ஏதாவது ஓட்டை ஒடைசல் இருந்தால் கோர்ட் மூலமாக அது நிறுத்தப்பட்டு, இன்னும் அதிக காலதாமதம் ஏற்படும். அதனால் சட்டத்திற்கும் காலதாமதம் ஏற் படும். இம்மாதிரியாகத்தான் இந்து மத பரிபாலன சட்டம் கொண்டுவந்தபோதுகூட, அதிலே சில லீகல் கஷ்டங்கள் இருக் கிறது என்று காட்டி, அது இப்போது கவர்ன்மெண்டு சம்மதம் பெற்று வருவதற்கு ரொம்ப காலதாமதமும், தடையும் ஏற்பட்டது. அதேபோல்தான் எஸ்டேட் அபாலிஷன் ஆக்ட் வந்தபோதும் இதிலே ஏதோ ஓட்டை ஒடைசல் இருப்பதாகச் சொல்லப்பட்டு, தாமதமாக்கப்பட்டது. ஆகவேதான் அந்த மாதிரி ஏதாவது சட்டத்திற்கு விரோதமாக இருக்கக்கூடாதே என்பதற்காக, இதைக் கொஞ்சம் விரிவாக ஏற்படுத்தி இருக்கிறோம்.

அப்படி இப்போது ஏற்படுத்தி இருப்பதை எதிர்க்கட்சியினர் தங்களுடைய வாதத்திற்கு தக்கபடி பிரயோஜனப்படுத்திக் கொண்டார்கள். அதாவது "To promote social and economic justice" என்றிருப்பதை அவர்கள் அவர்களுடைய வாதத் திற்கு உபயோகித்துக் கொண்டதுபோல் நானும் என்னுடைய வாதத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்ள முடியும். எப்படி யென்றால், "To Promote social and economic justice" என்று சொல்லும்போது, ஒரு தரத்தாருக்கு மட்டும்தான் சொத்து இருக்க வேண்டும், பிறருக்கு இருக்கக்கூடாது என்பது அல்ல. சமுதாயம் மொத்தத்திற்கும் இருக்க வேண்டுமென்பது தான் அதன் அர்த்தம். ஒருவனை ஓட்டையாண்டி ஆக்கிவிட்டு, மற்றொருவன் வாழ வழிவகை செய்யவேண்டுமென்பது அல்ல

[Sri M. A. Manickavelu] [30th August 1961

அதன் கருத்து. அந்த எண்ணத்தோடு இது எழுதப்படவில்லை. எதையும் பல பிரிவினரும், பல பகுதிகளிலே உள்ளவர்களும் எடுத்துக்கொண்டு பொருளாதாரத்திலே உயர்வதற்கு வழி செய்ய வேண்டுமென்பதுதான் இதன் நோக்கம். அந்த அடிப்படையிலே பார்த்தால் நாம் இப்போது செய்திருக்கிறது, எல்லாப் பகுதியின ருக்கும் கூடுமான வரையில் நியாயமான முறையிலே "To promote social and economic justice" என்று சொல்லக்கூடிய ரூபத்திலே, அந்த அடிப்படையிலேதான் செய்திருக்கிறோமே தவிர, கனம் அங்கத்தினர் அர்த்தம் செய்து கொண்ட முறையிலே இருக்காது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த வாசகத்திற்கு அவர்கள் சொல்லும் கருத்தும் தவறு. சமுதாயம் உயரவேண்டு மென்பதுதான் அதன் குறிக்கோளே தவிர, ஒரு பகுதி மட்டும் என்று அர்த்தமல்ல. அதன்பின் யாரோ இங்கு வந்தார்கள் என்றும் அதுபற்றி கனம் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டார்கள் என்றும் சொன்னார்கள். அதற்கு நான் சொல்கிறேன். அப்படி அவர் கள் வந்த சம்பவம் எனக்குத் தெரியும். நான் படிக்கிற காலத்திலே மீட்டிங் நடக்கிறது என்று சொல்வார்கள். அந்த மீட்டிங்கிலே சிலர் பேசுவதற்கு நிறைய ஆட்கள் வருவார்கள். சிலர் பேசு வதற்கு ஆட்களே வரமாட்டார்கள். அப்படி ஆள் சேராத கூட்டத்திற்கு ஆட்களைப் போய் பிடித்துக்கொண்டு வருவார்கள். அந்த மாதிரிதான் இங்கே வந்தவர்கள். கோஷம் செய்வதற்கு ஆள் வேண்டுமே, அதற்காக ஹார்பாரில் இருப்பவர் கள் எல்லாம் வந்தார்கள். அவ்வளவுதான். வேறொன்றுமில்லை. அப்படி ஹார்பரிலிருந்து வந்தவர்கள், அவர்களுக்கு கிளிப்பிள்ளை களுக்குச் சொல்லிக்கொடுத்திருப்பதுபோல், சொல்லிக்கொடுத் திருப்பதை 30, 15 என்று கோஷம் செய்துவிட்டுப் போய் விட்டார்கள். அவர்களுக்கு அதற்குமேல் ஒன்றும் விளங்கவில்லை. இது அந்த காலத்திலே மீட்டிங்கிற்கு ஆள் சேர்ப்பதைப்போல் தான் இருந்ததே தவிர, வேறு ஒன்றுமில்லை.

இந்த உச்ச வரம்பை நாம் 30 எக்கரா வைத்திருக்கிறோம். சிலர் இதை ரொம்பவும் அதிகம் என்று சொல்கிறார்கள். மற்றொரு சாரார் இது ரொம்பவும் குறைவு என்று சொல்கிறார்கள். குறைவு என்று சொன்னவர்கள் 50 என்று இருக்க வேண்டுமென்றும், 100 என்று இருக்கவேண்டுமென்றும் சாட்சி சொன்னபோது சொன்னார் கள். அதேபோல் ஒரு சாரார் 15 இருக்கவேண்டுமென்றும், 5 இருக்கவேண்டுமென்றும் சொன்னார்கள். நல்லவேளையாக யாரும் 5-க்குக் குறைவாகச் சொல்லவில்லை. இதிலே இங்கே இருக்கக்கூடிய ஒரு மர்மம் என்னவென்றால், 15 என்று சொல்வதிலே கம்யூனிஸ்டுகளும், திராவிட முன்னேற்றக் கழகத்தினரும் ஒத்திருக்கின்றனர். இதிலே அவர் களிடையே ஒற்றுமை ஏற்பட்டிருக்கிறது. இப்படி அவர்கள் விஷயத்திலே இது மேலும் ஒற்றுமையை வளர்ப்பதற்கு வேண்டு மானால் பயன்படும். ஆனால் அரசாங்கம் 30 என்று கொண்டுவந்த தற்குக் காரணம், இந்த நிலத்தை வைத்திருக்கக் கூடியவர்களும் ஓரளவு நல்லமுறையில் வாழ்க்கையை நடத்த வேண்டுமென்பதற்

காகத்தான். அவர்களுக்கும் ஓரளவு வருமானம் வேண்டும். அவர்களும் தங்கள் பிள்ளைகளை படிக்க வைக்க வேண்டும். எல்லா வற்றையும்விட முக்கியமானது நாம் இப்படிப்பட்ட ஒரு வரம்பை இந்த அக்ரிகல்சர் செக்டாரிடல்தான் கொண்டு வருகிறோம். இதையே இண்டஸ்ட்ரீஸ் செக்டாரிலோ அல்லது இதர துறை களிலோ இன்னும் கொண்டுவரவில்லை. ஆகையால் அவர்கள் வாழ்க்கையை நல்லமுறையில் நடத்தக்கூடிய விதத்திலே ஏற்பாடு செய்யவேண்டும். இதிலே டிஸ்பாரிடியை இன்னும் குறைக்க வேண்டுமென்று சொன்னால், 1,000, 2,000, 10,000 என்ற அளவிலே நிலம் வைத்துக்கொண்டிருப்பவர்களுக்கு இந்த அளவுக்குத்தான் டிஸ்பாரிடி செய்ய முடியும். அதேபோல் ஒரு ஏக்கர் என்று செய்துவிடுவது டிஸ்பாரிடியாக ஆகிவிடாது. அது தவறு. எந்தச் சூழ்நிலையிலே நிலச் சொந்தக்காரர்கள் தங்களுடைய வாழ்க் கையை நல்லமுறையிலே நடத்த முடியும் என்பதைக் கணக்கிட் டுத்தான் இதைச் செய்ய வேண்டியிருக்கிறது. அது மாத்திர மல்ல. இந்த நிலத்தைப் பிரித்துக் கொடுப்பதிலே இன்னொன்றை யும் கவனிக்க வேண்டும். சாதாரணமாக நிலத்தைப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். சிறு அளவிலே நிலத்தைப் பிரித்துக் கொடுத்து, அது உன்னுடைய நிலம் என்று சொல்லி, அதைச் சாகுபடி செய்ய வேண்டுமென்று சொன்னால், அவனுக்கு ஊக்கம் ஏற்படுகிறது என்பது வாஸ்தவம் தான். அவனுக்கும் ஊக்கமேற்பட்டு, உற்பத்தி அதிகம் செய்ய லாம். ஆனால் அதே மாதிரி நிலம் ஒருவரிடம் அதிகமாக இருந்து, அதை நாம் எடுத்துக் கொள்ளும்போது எந்த அளவுக்கு அவனி டம் நிலம் இருந்தால் அவன் உற்சாகமாக, உற்பத்தியை அதிகமா கப் பெருக்குவதற்கு பாடுபடுவான் என்பதையும் கவனிக்கவேண்டு மல்லவா? ஆகவே இந்த இரண்டு துறைகளிலும் நாம் கவனம் செலுத்தி, இந்தச் சட்டத்தைக் கொண்டு வர வேண்டியிருக்கிறது. அந்த அளவிலே இதிலே கவனம் செலுத்தித்தான் அவர்களுக்கு இந்த அளவுக்கு நிலம் குறிப்பிடப்பட்டுள்ளது. இல்லாவிட்டால், அவர்களும் உற்சாகமாக உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு முன்வர மாட்டார்கள். தவிர, இப்போது சில புது மாதிரியான முறைகள் மூலம் விவசாயத்தை அபிவிருத்தி செய்வதற்கான திட்டமிருக்கிறது. இதையெல்லாம் அவர்கள் கையாளவேண்டி இருக்கும் என்பதாலும், அவர்களிடையேயும் குறைவு ஏற்படக் கூடாது என்கின்ற முறையிலேயும்தான் இந்தச் சட்டம் இந்த அளவில் கொண்டுவரப்பட்டிருக்கிறது. பிளானிங் கமிஷன் 'வெல் மானேஜ்டு பார்ம்ஸ்'-க்கு 'எக்ஸெம்ப்ஷன்' கொடுக்கலாம் என்று சொல்லுகிறார்கள். இதில் நிலப்பரப்பு மாத்திரமல்ல, மூளைப் பரப்பும், 'பிரைன் காபிடலும்' இருக்கிறது. புதுமாதிரியான முறைகளை அனுஷ்டித்து அதிகமாக உற்பத்தி செய்யமுடியும், அவ்வாறு உற்பத்தி செய்துகொண்டிருக்கிறார்கள். 'வெல் மானேஜ்டு பார்ம்ஸ்' ஏற்கனவே அவர்கள் செய்துகொண்டிருக் கிறார்கள். அதைப் பிரித்துவிட்டால் இப்பொழுது சின்னபின்ன மாய் போய்விடும். உணவு உற்பத்தி குறையும் என்று அதனால் தான் பிளானிங் கமிஷன் விதி விலக்கு கொடுக்கலாம் என்று

சொன்னார்கள். ஆனால் நாங்கள் அப்படிச் செய்யவில்லை. அதற்குக் காரணம் என்னவென்றால், எது 'வெல் மானேஜ்டு பார்ம்' எது 'இல் மானேஜடு பார்ம்' என்று நாம் கண்டுபிடிப்பது கஷ்டம். அதோடு அல்லாமல் ஏதாவது ஒரு 'வெல் மானேஜ்டு பார்ம்'-க்கு விதி விலக்கு அளித்தால், உடனே எதிர் தரப்பில் உள்ளவர்கள் 'காங்கிரஸ் தரப்பு ஆசாமி, ஆகையினால்தான் கொடுத்தார்கள்' என்று குற்றச்சாட்டைச் சொல்லுவார்கள். அதற்காகத்தான் இதற்கு விதி விலக்கு கொடுக்கவில்லையே தவிர, வேறு காரணமில்லை.

பிளானிங் கமிஷன் என்ன சொல்லுகிறார்கள் என்றால், வருஷத்திலே சராசரியாக ரூ. 3,600 வருமானம் இருக்கிற அளவிலே இருக்கவேண்டுமென்று சொன்னார்கள். வருமான அளவிலே நிலத்தை குறைத்தால் பல சிக்கல்கள் அதனால் ஏற்படும். ஆகையினால், நிலப்பரப்பு அளவில் வைத்தால் நல்லது. ஆந்திராவில்கூட முதலில் வருமான அளவில் வைத்தார்கள். ரூ. 3,600 அல்லது 5,400 என்ற அளவில் வைத்திருந்தார்கள். அந்த வருமான அளவைக்கூட அவர்கள் மாற்றிவிட்டார்கள், அல்லது மாற்றப்போகிறார்கள் என்ற முறையிலே இருக்கிறது. ஏனென்றால், நிலத்தை சுருக்கிவிடுகிறோம் என்று சொல்லி வருமான அளவிலே வைத்துவிட்டால், எப்பொழுது வருமானம் அந்த அளவுக்கு மேலே போகிறதோ, அப்பொழுதுதான் அதை உச்ச வரம்பிற்குள் கொண்டுவர முடியும். அதனால் இன்னும் அதிகமாக உற்பத்தி செய்யவேண்டுமென்ற ஊக்கம் இருக்காது. உச்சவரம்பை நிலப் பரப்பில் வைத்துவிட்டால் அதற்கு மேலே உற்பத்தி செய்து வருமானம் செய்துகொண்டால் நல்லதுதான். நிலப்பரப்பை குறைத்துவிட்டால் குறைந்த பரப்பில் எவ்வளவு உற்பத்தி செய்து வருமானத்தை அதிகப்படுத்த முடியுமோ அதில் முழு கவனம் செலுத்துவார்கள். 'இன்டென்ஸிவ் கல்டிவேஷன்' செய்வதற்கு நிறைய ஊக்கம் கொடுக்கும். அதனால்தான் நிலப்பரப்பு அடிப் படையிலே வைத்திருக்கிறோம். ரூ. 3,600 வருமானம் வரும் என்று சொல்லி 30 ஏகர் வைத்திருக்கிறீர்களே, 30 ஏகருக்கும் ரூ. 9,000, 10,000 வருமானம் வரும் என்று சொல்லலாம். புள்ளிவிவரத் தைப் பார்த்தால் அம்மாதிரி சொல்லுவதற்கு இடம் இல்லை. சாதாரணமாக ஜில்லாவாரியாகப் பார்த்தால் சுமார் ரூ. 130-லிருந்து ரூ. 300 வரைக்கும் சராசரி வருமானம் பெறலாம் என்று புள்ளி விவரத்தைப் பார்த்தால் தெரிகிறது. ஆகையால் ரூ. 130 வருமானம் வந்தால் 10 ஏகராவுக்கு ரூ. 1,000 சில்லரை வருமானம் வரும். 30 ஏகராவுக்கு ரூ. 3,000 சில்லரை வருமானம் வரும். நிலத்திலிருந்து வருமானம் வருவது மாதாமாதம் 30-ம் தேதி முடிந்தவுடன் 1-ம் தேதி சம்பளம் வாங்குவதுபோல் அல்ல. வெள்ளம் வரலாம், ஸைகிளோன் வரலாம், மழை பெய்யாமல் இருக்கலாம். 'ஸீஸனல் கண்டிஷன்ஸ்' ரொம்ப மாறுபாடுகளை ஏற்படுத்தலாம். ஆகவே, சராசரி வருமானத்தைத்தான் கணக்கில் எடுத்துக் கொள்ளலாம். ஒரு வருஷத்தில் வருமானம் அதிகமாக வரலாம். ஒரு வருஷத்தில் பூஜ்யமாக இருக்கலாம். அதனால் இது விஷயத் தில் ஒரு 'மார்ஜின்' இருக்கவேண்டியது அவசியம். ஆகையினால்

தான் கொஞ்சம் நிம்மதியாக கஷ்டம் இல்லாமல் 'ஸீஸனல் கண்டிஷன்ஸ்'-க்கு உட்பட்டு நல்ல முறையிலே 'இன்டென்ஸிவ் கல்டிவேஷன்' செய்வதற்கு அவர்களுக்கு ஊக்கம் கொடுக்கிற முறையிலேதான் 30 ஏகரா என்று வைத்திருக்கிறேம். ஏதோ நம் ராஜ்யத்தில் மட்டும் அப்படி வைத்துவிட்டோம் என்று சொல்லு வதற்கில்லை. கேரளாவில் 15-லிருந்து 25 ஏகரா என்று வைத்தி ருக்கிறர்கள். ஆந்திராவில் 4½ 'பாமிலி ஹோல்டிங்ஸ்' என்று வைத்திருக்கிறர்கள். அதாவது 25, 30 ஏகரா வரலாம். ஒரிஸாவில் 25-லிருந்து 50 ஏகரா வைத்திருக்கிறர்கள். மத்திய பிரதேசத்தில் 28-லிருந்து 53 ஏகரா வைத்திருக்கிறர்கள்—பெஸ்டு லாண்ட்ஸ், பெரனியலி இர்ரிகேடட் லாண்ட்ஸ், அதற்கு 'ஈக்விவலண்டு' ஜாஸ்தியாக வரும். உத்திரப் பிரதேசத்தில் 40-லிருந்து 54 ஏகர், டெல்லியில் 30-லிருந்து 60 ஏகர், வெஸ்டு பெங்காலில் 25 ஏகர், அஸாமில் 50 ஏகர் என்று வைத்திருக்கிறர்கள். யாரும் 10, 15 ஏகர் என்று வைக்கவில்லை. நாம் 30 ஏகர் என்று வைத்திருக்கும் பொழுது இதெல்லாம் பார்த்து ஏறக்குறைய அந்த அளவுக்குத் தான் இருக்கிறது. அதில் ஒரு விசேஷம் என்னவென்றல், நாங்கள் இதை முதலிலேயே நன்றாக ஆராய்ந்து பார்த்து 30 ஏகர் என்று வைத்தோம். மற்றவர்கள் முதலில் இருந்ததை குறைத் தார்கள், ஜாஸ்தியாக்கினர்கள். நாங்கள் அம்மாதிரி 'ப்ளக்சுவேஷன்' இல்லாமல் முதலிலேயே சரியான முறையிலே யோசனை செய்து 30 ஏகர் என்ற அளவிலே நம் மாகாணத்தில் செய்தோம்.

இன்னென்று 'கான்ஸ்டிடியூஷனுக்கு' விரோதம் என்றெல் லாம் சொன்னர்கள். அவர்கள் கட்சியைச் சேர்ந்த பெரியார்தான் 'பிரஸிடெண்டுக்கு' இதைப்பற்றி முறையிட்டார். இதெல்லாம் 'இல்லீகல்', இம்மாதிரி ஒரு சட்டம் கொண்டுவரக்கூடாது என்றெல்லாம் எழுதினர். இதற்கெல்லாம்தான் நாங்கள் 'ப்ரிஆம்பிளில்' முன்பு சொன்னதுபோல விளக்கம் செய்திருக் கிறேம். ஆகையினல், இதையெல்லாம் ஆராய்ந்து பார்த்தால், 'ஸீலிங்' 30 ஏகரா அதிகம் என்று சொல்லுவதற்கில்லை. 'இன்டென்ஸிவ் கல்டிவேஷன்' இன்னும் மற்ற எந்த அடிப்படை யிலிருந்து பார்த்தாலும் அது நியாயம் என்றுதான் தோன்று கிறது. சில பேர்கள் 100, 150 ஏகர் வைக்கலாம் என்று சொல்லு கிறர்கள். சில பேர்கள் 10, 15 ஏகர் என்று சொல்லுகிறர்கள். இதெல்லாம் அவரவர்கள் 'இண்டிவிஜுவல் ஒபினியன்'. அரசாங்கம் இரண்டையும் கேட்டு, இருக்கக்கூடிய சூழ்நிலையிலே எது நியாயம் என்று தோன்றுகிறதோ அந்த வகையிலே 30 ஏகர் என்று ஏற்பாடு செய்திருக்கிறர்கள். விவாதத்தில்கூட, தனிப் பட்ட அபிப்பிராயங்களில்கூட 'க்ளிவேஜ்', 'கிளியராகத்' தெரிகிறது. ஒரு பிரிவினர் நிலச்சொந்தக்காரர்கள் சார்பிலே பேசுபவர்கள் அவர்களுடைய உரிமையிலே நாம் கை வைக்கக் கூடாது என்று பேசுகிறர்கள். சாகுபடியாளர்கள் சார்பிலே பேசுகிறவர்கள் அவர்கள் ஏமாற்றம் அடைந்திருக்கிறர்கள் என்றெல்லாம் சொல்லுகிறர்கள். இரண்டு பிரிவினர்களும் பேசுவது இரண்டு 'எக்ஸ்டிரீம்'. இதை நன்றாக கவனிக்க

வேண்டும். எனக்கு இந்த சமயத்தில் ஒன்று ஞாபகத்திற்கு வருகிறது. ஒரு கிராமத்திலே ஒரு வீட்டிலே படித்த பையன் இருந்தான். அவன் ஊருக்குப் போகவேண்டும், தொழில் நடத்த வேண்டும் என்று சொல்லும்போது, குடும்பத்திற்கு முடியாத ஒரு விஷயத்தைச் சொல்லுவான். அது முடியவில்லை என்றால், வேறு நேர் விரோதமாகச் சொல்லுவான். இரண்டும் 'எக்ஸ்டிரீம்'. 'கோல்டன் மீன்', அதாவது இதையும் அனுசரித்து, அதையும் அனுசரித்து, இரண்டு சாராருக்கும் பாதகம் இல்லாத முறையிலே நாம் 30 ஏகர் என்று வைத்திருக்கிறோம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

ரிட்ராஸ்பெக்டிவ் எபெக்ட் பற்றிச் சொன்னார்கள். நாம் சொல்லுகிறோம், 6—4—1960-லிருந்து அமுலுக்கு வரும் என்று. ஆந்திராவிலே அவர்கள் சட்டம் அமுலுக்கு வரும் தேதியிலிருந்து என்று சொல்லுகிறார்கள். ரிட்ராஸ்பெக்டிவ் எபெக்ட் கொடுப்பதில் இன்னொரு கஷ்டம் இருக்கிறது. நிலங்களையெல்லாம் பிரித்து வைத்து விட்டார்கள் என்று குறை சொல்லுகிறார்கள். நம் கோரிக்கை என்ன ? நிலம் குவிந்து இருக்கக் கூடாது என்பது தான். ஏனென்றால், 1,000, 2,000 ஏக்கரா உடையவர்கள், நல்ல சாகுபடி செய்ய மாட்டார்கள். ஒவ்வொரு பகுதியையும் அவன் கவனித்து சாகுபடி செய்ய மாட்டான். அப்படி இருக்கும் நிலையில், 2,000, 3,000 ஏக்கராக்கள் உள்ளவர்களிடமிருந்து நிலத்தை எல்லாம் எடுத்துக் கொண்டு, 30 ஏக்கர்தான் என்று போட்டிருக்கிறோம். அதிலேயும் குற்றம் சொல்வதென்றால், மனித சுபாவம் எத்தனை எடுத்தாலும் திருப்தி அடைவதில்லையென்றால், அது சரியாக இருக்காது. நாம் இன்றைக்கு 30-க்குப் பதிலாக 20, 25 என்று போட்டிருந்தாலும் அப்பொழுதும் அதேமாதிரிச் சொல்லலாம். ஒன்றுமேயில்லை யென்றாலும், அதற்கும் சரியான வாதம் சொல்லலாம். அவர்கள்தான் எத்தனையோ நாட்களாகச் சாப்பிட்டு வந்திருக்கிறார்களே, எல்லாவற்றையுமே எடுத்து விட்டால்தான் என்ன என்று சொல்லுவார்கள். எது செய்தாலும் அதற்கு அவ்வப்பொழுது ஆர்குமெண்டுகள் வரும். ரிட்ராஸ்பெக்டிவ் எபெக்ட் கொடுப்பதில், அவர்கள் எப்பொழுது பிரிவினைகள் செய்தார்கள், எப்படிச் செய்தார்கள் என்றெல்லாம், அதையெல்லாம் பார்க்க வேண்டுமென்றால், அதற்கு ஒரு "ரோவிங் கமிஷன்" போட்டு, இன்வெஸ்டிகேடிங் அதாரிடியாகச் செய்து, இன்வெஸ்டிகேஷன் செய்து, அவைகளை எல்லாம் செய்வதென்றால், அது பெரிய சிக்கல்களை உண்டாக்கும், ஒரு முடிவுக்கும் வர முடியாது. ஆகவே, இந்த ரிட்ராஸ்பெக்டிவ் எபெக்ட் கொடுப்பதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன.

12-30 p.m

நம் மாகாணத்தின் ஜனத்தொகை 1951-ல், 3 கோடி இருந்தது ; இப்பொழுது மொத்த ஜனத்தொகை 340 லட்சம். இதிலே, அக்ரிகல்சுரல் லேபர் 17,20,000 இருக்கிறார்கள். அரசாங்கத்திற்கு இருக்கக்கூடிய "அஸெஸ்ட் கல்டிவபிள் லாண்ட்ஸ்" 3 லட்சம் சொச்சம் இருக்கிறது. இது சாதாரணக் கணக்கு ; இதையே ஸ்டாண்டர்ட் ஏக்கர் ஆக்கினால், 1,30,000 ஏக்காகிறது. உபரி

30th August 1961] [Sri M. A. Manickavelu]

நிலம், பழைய கணக்குப்படி 2,82,000. இதெல்லாம் "ரப்" கால்குலேஷன்தான். இதையெல்லாம் நிலமில்லாதவர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்ருல், ஆளுக்கு 21 செண்ட் வரும். இந்த 21 செண்ட் ஒரு எகனமிக் யூனிட்டாக இருக்குமா என்று பார்க்க வேண்டும். அதற்காக ஒரு ஜதை மாடு வைத்துக்கொண்டு, உழுது பயிர் செய்ய முடியாது. இம்மாதிரிச் செய்வதால்தான் "ப்ராக் மெண்டேஷன்" நிறைய ஆகிவிட்டது. இம்மாதிரிச் சொத்துரிமை அடையும் வகையில், ரொம்பப் "ப்ராக் மெண்டேஷன்" தான் ஆகிவிடுகிறது. ஆனல், நாம் 15 ஏக்கர் ஸீலிங் என்று வைத்தாலும் இந்த நிலைமைதான். உபரி நிலம் போதவே போதாது. ஆகவே, நிலமில்லாதவர்களுக்கு நிலம் வழங்குவதென்பதான பிரச்சினை தீரவே தீராது. சர்க்கார் நிலத்தை எடுக்க வேண்டும் என்று சொல்லும்போது, அவர்களுடைய நிலம் வைத்திருப்பவர்களுடைய உரிமைகளும் பாதிக்கப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அவர்களும் பணம் கொடுத்து வாங்கியிருக்கிருர்கள். ஆதலால் அவர்களுக்கு அதில் உரிமை இருக்கிறது. அதில் நாம் ஜாக்கிரதையாகச் செல்ல வேண்டியிருக்கிறது. அதே சமயத்தில் நிலத்தைப் பங்கு போடுவதால் உற்பத்தி குறையாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். அதையும் மனதில் வைத்துக் கொண்டுதான் நாம் எல்லாம் செய்ய வேண்டியிருக்கிறது. மிச்சம் வரவில்லையென்ருல், மிச்சம் வருவது என்பது நம் முக்கியக் கொள்கையல்ல. சமுதாயத்தை சோஷலிஸ்டு பாட்டர்ன் அடிப்படையில் செய்யவேண்டும். ஒரு மாணக்கனை 10-ஐ 3-ஆல் வகுக்க வேண்டும் என்ருல், அவன் வகுத்து மிச்சம் 1 என்றுதான் சொல்ல முடியும். அதிகமாக மிச்சம் வராது. ஆனல், 6-ஆல் வகுத்தால், மிச்சம் 4 வருமே என்ருல், நாம் வகுக்க வேண்டும் என்பது 6-ஆல் அல்ல, 3-ஆல் தான். ஆகவே, நமது கொள்கை சமுதாயத்திற்கு "சோஷல் ஜஸ்டிஸ்", "எகனமிக் அப்லிப்டு" கொடுக்க வேண்டும் என்பதுதான்.

சர்க்கார் "கல்டிவபிள் லாண்ட்"-கள், 8 லட்சம் ஏக்கரா இருந்தது. அதில் 4 லட்சம் கொடுக்கப்பட்டு விட்டது. 4 லட்சம் அல்லது கொஞ்சம் அதிகமாக இருக்கும். இதெல்லாம் புள்ளி விவரங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

"எக்ஸம்ஷன்" பற்றிச் சொல்லப்பட்டது. மடம், கோவில் நிலங்களுக்கும் விலக்குக் கொடுத்திருக்கிறதே என்று சொன்ஞர்கள். முதலிலே கொடுக்கவில்லை. 200 ஏக்கரா என்று இருந்தது. பிற்பாடு, ஆராய்ந்து பார்த்ததில், சட்ட நிபுணர்கள் சொன்னதிலிருந்து பார்த்தால், இந்த நிலங்களுக்கு ஒரு கட்டுப்பாடு வைத்தால் அது சட்டத்திற்கு விரோதமாக இருக்கும் என்று சொல்லப்பட்டது. இன்றைக்கு திரு. அண்ணுத்துரை ஒரு அலஹபாத் தீர்ப்பைப் பற்றிச் சொன்ஞர்கள். அதிலே சொன்னது இதுதான்:

"There was no ground to hold that Article 26 (c) of the Constitution prevents or is intended to prevent property of religious institutions being acquired by authority of law. But Article 26 (c)

enjoins a right on the religious denominations to own and acquire immovable property. They could not better religious trusts from acquiring property in future in excess of the ceiling area. That is, any bar on future acquisition of property of religious trusts is likely to be struck down as unconstitutional ''.
ஆகையினால், இப்பொழுது இது பப்ளிக் பர்பஸ் என்று சொன்னாலும், ப்யூசர் சம்மந்தப்பட்டவரையில், நாம் அப்படிச் செய்வது "அன்கான்ஸ்டிடூஷனல்" என்று சொல்லுவதால், அது மாற்றப்பட்டது. மடம், கோவில்களில், பலபேர் ஒவ்வொரு கருத்தோடு கொடுத்திருக்கிறார்கள். அவர்களது கருத்துக்கள் நிறைவேற வேண்டும்; பூஜை என்று ஏதாவது வைத்திருப்பார்கள், அவைகளெல்லாம் நிறைவேறவேண்டும். அதற்கு விரோதமாக நாம் ஏதாவது செய்தால், அதனால் வருமானம் குறைந்துபோய்—நாம் காம்பன்சேஷன் தஸ்திக் இவைகள் கொடுத்தாலும்—நில வருமானம் குறைந்து போனால், அதை ஈடு செய்ய அவர்களால் முடியாது போய்விடும். ஆகவே, அந்த மடங்கள் கோவில்கள் சம்மந்தப்பட்டவர்களுக்கு பாதகம் ஏற்படாமல் பார்த்துச் செய்ய வேண்டும். ஆகவே, " **to regulate tenancv in lands held by religious mutts and temples**''. என்ற மாதிரியில் இந்த மசோதா தயாராகி இருக்கிறது. இம்மாதிரிக் கொண்டுவந்தால் அந்த மடம், கோவில் இவைகளின் நிலங்களில் இருப்பவர்களுக்கு பங்கம் ஏற்படாமல் இருக்கும். இருந்தாலும் இம்மாதிரி அதை ரெகுலேட் செய்வதற்கு வேறு ஒரு சட்டம் கொண்டு வருவதைப்பற்றி ஆட்சேபணை இருக்க வேண்டியதில்லை. எத்தனையோ பேர் பிள்ளை இல்லாமல் செத்துப் போகிறார்கள். பெண்களாக இருந்தாலும் கோயிலுக்குத்தான் எழுதி வைக்கிறார்கள். வேறுவிதமாக எழுதி வைக்கிற முன்னேற்றம் இன்னும் வரவில்லை. இப்பொழுதெல்லாம் சிலர் மருத்துவ ஸ்தாபனங்கள், கல்வி ஸ்தாபனங்கள் இவற்றுக்கு எழுதி வைக்கிறார்கள். அநேகமாக பெண்களின் சொத்து கோயில்களுக்குத்தான் போகிறது. ஆகவேதான் அதை ரெகுலேட் செய்ய நினைத்திருக்கிறோம்.

சர்க்கரை ஆலைகளுக்கு ஏன் விதிவிலக்கு என்று பேசப்பட்டது. ப்ளானிங் கமிஷனிலேயே கொடுக்கலாம் என்றிருக்கிறார்கள். அதற்கும் நாம் அப்படியே கொடுக்கவில்லை. பொறுப்புள்ள நபர்களை வைத்து ஷுகர் போர்டு என்று ஏற்படுத்தித்தான் கொடுக்க வகை செய்திருக்கிறோம். அது ஒரு இண்டஸ்ட்ரி. கோடிக்கணக்கில் முதலிட்டு சர்க்கரை ஆலை ஏற்படுத்துகிறார்கள். அம்மாதிரி ஏற்படும்போது சிறுசிறு நிலக்காரர்களிடம் இருந்து கரும்பு வாங்கும் நிலைமை ஏற்பட்டுவிட்டால் என்ன என்னவோ விபரீதமான நிலை ஏற்படலாம். இவர்கள் இவ்வளவு விலை கொடுத்தால்தான் கொடுப்போம் இல்லையென்றால் இல்லை என ஸ்ட்ரைக், கோஷம் போட ஆரம்பித்துவிடுவோம். அந்தத் தொழில் ஒழுங்காக நடக்கவேண்டுமென்றால் இடைஞ்சல் இல்லாமல் நடக்க ஓரளவு நாலாயிரம் எக்கர், ஐந்தாயிரம் எக்கர் என்று கரும்பு

30th August 1961] [Sri M. A. Manickavelu]

சாகுபடிக்கு உத்தரவாதம் இருக்கவேண்டும். அதற்காகத்தான் ரொம்ப ஜாக்ருதையாக அவர்களுக்குத் தேவையான நிலத்தை பரிசீலித்துக் கொடுக்க ஷுகர் போர்டுக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறோம். பம்பாயைத் தவிர மற்ற மாகாணங்களில் இப்படி இல்லை. அவர்கள் ஒரேயடியாக விலக்குக்கொடுத்து விட்டார்கள். ஆந்திரப் பிரதேஷ்; மத்தியப் பிரதேஷ், ஒரிசா, மணிபூர், பீகார் இங்கெல்லாம் அவுட்ரைட்டாகக் கொடுத்திருக்கிறார்கள். மேலும் 'Family' டெபனிஷனைப்பற்றி இங்கே சொல்லப்பட்டது. முதலில் சொன்னமாதிரி இருந்தால் இந்து குடும்பங்களுக்குப் பொருந்தும். மற்றவற்றுக்குப் பொருந்தாது. ஆகவேதான் கணவன், மனைவி, மைனர் குழந்தைகள் என்று இப்போது நாம் செய்திருக்கும் இந்த ஏற்பாடானது எல்லோருக்கும் பொருந்தும். ஒரு குடும்பத்திற்கு 30 ஏக்கர் என்றும் மேலே ஒரு நபருக்கு ஐந்து ஏக்கர்—மொத்தத்தில் 60 ஏக்கருக்கு மேல் போகாமல் என்று இப்போது செய்திருக்கிறோம். இது ரொம்ப நியாயமானது. பாரம்பர்யமாக எத்தனையோ ஆண்டுகளாக அவர்கள் அனுபவித்துவந்த ஆயிரக்கணக்கான ஏக்கர்களை விட்டுக்கொடுக்க நிலச்சுவாந்தார்கள் முன் வந்திருக்கிறபோது அவர்களுடைய சொத்திலேயே 60 ஏக்கர்கூட அதிக பட்சமாக வைத்துக்கொள்ள உரிமையில்லையென்றால் அது நியாயமாகாது. ஸ்ரீதனத்தைப்பற்றிகூட இதில் ஒழுங்கான முறையில் வகை செய்யப்பட்டிருக்கிறது. பத்து ஏக்கர் வைத்துக் கொள்ளலாம். ஜெனரல் பூலில் போட்டு விட்டால் அது செல்லாது. ரிசம்ஷன் விஷயத்தில் கூட அந்த 60 ஏக்கரையுமே அவர்கள் இஷ்டத்திற்கு விடலாம் என்று சொல்லப்பட்டது. அதையும்கூட நன்றாகப் பரிசீலனை செய்து 5 ஏக்கர் வரையிலும் வேண்டுமானால் பர்சனல் கல்டிவேஷன் என்று வைத்துக்கொள்ளலாம் என்று வைத்திருக்கிறோம். சிறு நிலச்சொந்தக்காரர்களுக்கு இந்த அனுகூலம் வேண்டியது தான். அவர்கள் மிகவும் பணக்காரர்கள் அல்ல. வேறு உத்தியோகத்தில் இருக்கலாம். பிறகு வந்தால் அவர்கள் நிலத்தைத் திரும்பிப்பெற வழியிருக்கவேண்டும். அதிலும் 2 வருஷத்திற்குள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற பிரிவு இருக்கிறது. இது நியாயம் என்றே தோன்றுகிறது. இம்மாதிரி சிறு நிலச்சுவாந்தார்கள் சமுதாயத்திலேயே மிகவும் முக்கியமான பிரிவினர்கள். இந்தமாதிரி ஸ்டர்டி பெசண்ட்ரி இருக்க வேண்டியது முக்கியம். சமுதாயத்திலேயே இது ஒரு ஸ்டபிலைசிங் பாக்டர். அதை அழித்துவிடக்கூடாது. அந்த அடிப்படையில் தான் இது பரிசீலிக்கப்பட்டிருக்கிறது.

சாகுபடிக்காரர்கள் எல்லாம் ஏராளமாக அப்புறப்படுத்தப் பட்டிருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டது. அப்படி ஒன்றும் இல்லை. நம் மாகாணத்திலே 1957-58-லே கன்யாகுமரியைத் தவிர மெட்ராஸ் முதல் தெற்குக் கோடி வரையில் உள்ள எல்லா மாவட்டங்களிலுமே சேர்த்து 743 பேர்கள்தான். இதுதான் என்னிடம் இருக்கும் தகவல். 58-59-லே 960 பேர்கள். 59-60-லே 1470

பேர்கள். அப்படி ஒன்றும் ஆயிரக்கணக்கில் இல்லை. சட்டப்படி விதிக்கு முரண்பாடாக நடந்த காரணத்தினால் வெளியேற்றப்பட்ட வர்கள் இவ்வளவுதான். வெல் மானேஜ்டு பாரம் சம்பந்தமாக ஏன் விலக்குக் கொடுக்கப்படவில்லை என்றும் முன்பே சொல்லிவிட்டேன். கனம் அண்ணாதுரை அவர்கள் எகிப்திலே நிலச்சீர்திருத்தச் சட்டம் வந்த பிறகு பிரமாதமான ஊர்வல், உற்சாகம் எல்லாம் இருந்தது, இங்கே இல்லையே என்றார். பலநாட்களாக அடிமைப் பட்டுக் கிடந்து திடீரென்று வந்த சுதந்திரம் அது. கூண்டிலேயே அடைக்கப்பட்டிருக்கிற பட்சியைத் திறந்து விட்டால் அது "விர் விர்" என்றுதான் பறந்துபோகும். நம்மைப்போல அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் கொண்டுவரவில்லை. திடீரென்று தோன்றியதால்தான் அது அங்கே பெரிதாகத் தோன்றியது.

இக்கரைக்கு அக்கரைப் பச்சை என்று சொல்வார்களே, அது போல்தான் இதுவும். குடியிருப்பு சம்பந்தமாக மூன்று வருடத் திற்கு பாதுகாப்பு இருக்கிறது. வெளியேற்றப்படாமல் பாது காக்கக் கூடியதைச் செய்து கொள்ளலாம். பின், காம்பன்சேஷன் கொடுப்பது, மார்கட் ரேட்படி கொடுக்கவேண்டுமென்று சொன் னார்கள். ஏன் அவ்வளவு கொடுக்கவேண்டுமென்றும் கேட்கப் பட்டது, இங்கில்லாவிட்டாலும் வெளியிடத்தில் சொல்லப்பட்டது. நாம் செய்திருப்பது நியாயமானதாகயிருக்கிறது. 5000-க்குள் இவ்வளவு என்று படிப்படியாக வைக்கப்பட்டிருக்கிறது. "ஐதர் இன் காஷ் ஆர் இன் பாண்ட்" என்றிருக்கிறது. சின்னத் தொகைக்கு பணம் கொடுத்தாலும் கொடுக்கலாம், அந்த உரிமை யைப் பெற்றிருக்கிறோம். சின்னத் தொகையை கொஞ்சம்கொஞ்ச மாக கொடுத்தால் ஒரு தொழிலும் செய்ய முடியாது, கொஞ்சம் கொஞ்சமாகக் கொடுத்தால் பணத்தை அவர்கள் சாப்பிட்டுத் தீர்த்து விடுவார்கள் என்று சொன்னார்கள். அது உண்மை. ஆகவே சின்னத் தொகையை ஒரே தடவையில் கொடுத்தால் ஒரு தொழில் நடத்தலாம். அந்தச் சின்னத் தொகை எவ்வளவு என்று போகப்போகத்தான் தெரிந்து குறிக்க முடியும். பிற மாகாணங் களைப் போல் இல்லாது, நமது ராஜ்யத்தில் சின்னச் சின்ன சொந்தக்காரர்கள் மிக அதிகம். பத்து ஏக்கருக்கு உட்பட்ட பட்டாதார் 45 லட்சம் பேர்கள் இருக்கிறார்கள். 1,000, 5,000 ஏக்கர் வைத்திருப்பதுதான் கண்ணைக் குத்துகிறது. அதை எடுத் திருப்பதால் கண்ணைக் குத்துவது நின்று போய் விடும். நமது மாநிலத்தில் பெரிய நிலச்சுவாந்தார்கள் குறைவே தவிர சிறிய நிலச்சுவாந்தார்கள்தான் அதிகம். இயற்கையாகவே பரவலாக அமைந்திருக்கிறது, இச்சட்டம் மூலம் மேலும் பரவலாகச் செய் திருக்கிறோம். க்ரேஸிங் லான்ட்ஸ், தோப்பு இவைகளுக்கு ஏன் எக்செம்ஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று கேட்டார்கள். க்ரேசிங் லான்ட்ஸ்க்கு கொடுத்திருப்பது குறைவு இன்னும் அதிகம் வேண்டுமென்று சிலர் கேட்டார்கள். நம் நாட்டில் கால்நடைகள் அபிவிருத்தியாகவேண்டும். கால்நடை அபிவிருத்திக்கு மேய்ச்சல் நிலம் தேவை. எல்லாவற்றையும் சாகுபடிக்கு கொண்டு வந்து

30th August 1961] [Sri M. A. Manickavelu]

விட்டால் ஆடு மாடுகள் மேய்ச்சல் இன்றி திண்டாடி விடும். உலகத்திலேயே கால்நடை இந்தியாவில்தான் அதிகம், எண்ணிக்கையில். அதோடு உலகத்திலேயே மோசமான கால்நடையும் இந்தியாவில்தான். எலும்பும் தோலுமாக இருக்கின்றன, பல. "டெரிலிக்ட் காட்டில்" இருக்கின்றன, அவைகளை நன்றாக ஆக்குவது இங்கு சுலபமல்ல. மாடு மோசமாகிப் போய் விட்டாலும் அதை வைத்துக் கொண்டு தீனி போட்டுக் கொண்டிருக்கிறார்கள். மேல் நாடுகளில் அவைகளை சுட்டுக் கொல்லவோ என்னவோ செய்கிறார்கள். டெரிலிக்ட் காட்டிலை உடனடியாக குறைக்க முடியாது, கொஞ்சங்கொஞ்சமாக குறைக்கலாம். கால்நடைகளுக்கு மேய்ச்சல் நிலம் மிகத்தேவை. ஒவ்வொரு கிராமங்களிலும் எவ்வளவு இருக்கின்றன என்று பார்த்து நிலம் ஒதுக்கவேண்டும், க்ரேசிங்க்காக நிலம் ஒதுக்கியே தீரவேண்டும். பின், தோப்புகளுக்கு எக்ஸ்ஸெம்ஷன் கொடுத்திருக்கிறார்களே என்றார்கள். அங்கு, வெட் கல்டிவேஷன் செய்யமுடியாது. தென்னந்தோப்பு மிக அவசியம், நமக்கு தேங்காய் அவசியம்வேண்டும். சாப்பிட, மேலும் தேங்காய் எண்ணெயும்வேண்டும். இப்பொழுது வெளியிலிருந்து வரவழைக்கிறோம். நாமே அதிக உற்பத்தி செய்து வெளிநாடுகளுக்கு அனுப்பினால் நமக்கு "பாரின் எக்ஸ்சேஞ்சும்" கிடைக்கும். மேலும் அதற்கு ஸீலிங் வைப்பது கஷ்டம், சில ஐந்து வருடங்கள்தான் இருக்கின்றன, சில தென்னைகள் ஐம்பது வருடங்கள் இருக்கின்றன. இப்படி பல தொந்திரவு இருக்கின்றன. இப்படித்தான் பாக்கு மரம், மற்ற பழங்கள் கொடுக்கும் மரங்கள் எல்லாம். பின், "ப்யூயல் ட்ரீஸ்" விறகுக்காக நிலம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. முதலில் சவுக்கு மரம் என்று நினைத்தோம். பின், திருநெல்வேலிப் பகுதியைப் பார்த்தால் கோடை மரம் என்று என்னவோ சொல்கிறார்கள், பின் வேல மரம் என்றெல்லாம் இருக்கிறது. அதோடு நமக்கு விறகுப் பற்றாக்குறையும் இருக்கிறது. ரேஷியோபடி கொடுத்திருப்பது குறைவு என்று சொல்கிறார்கள். தரத்தை சரியாக பிரித்து சரியானபடி செய்திருக்கிறோம். பின்னர், ஆசைதம்பி அவர்கள் சொல்கிறபோது மடாதிபதிகள் நிலத்தை எடுக்க கஷ்டமிருந்தால் ஏன் கான்ஸ்டிட்யூஷனை "சேஞ்ச்" செய்யக்கூடாது என்று கேட்டார்கள். அது, இங்கு செய்வதல்ல. வேறு இடத்தில் மாற்ற வேண்டும். அதிலிருந்து அவர்கள் ஓரளவு ஒத்துக்கொள்கிறார்கள், சங்கடம் இருந்தாலும் இருக்கலாமென்று. கான்ஸ்டிட்யூஷனை "சேஞ்ச்" செய்வது அவ்வளவு சுலபமல்ல. அது, டெல்லி சட்டசபையில் செய்யவேண்டியது. பின் இதுவரை பிரித்தது போதாதா இன்னும் ஏன் அவகாசம் கொடுக்கவேண்டுமென்று கேட்டார்கள். ரெஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் படி 3 மாதத் தவணையிருக்கிறது. ரெஜிஸ்டர் செய்யலாம் என்ற முறையில், இருக்கிற அச்சட்டத்திற்கு விரோதமாகப்போவது அவ்வளவு உசிதமல்ல. முன்னமேயே பிரித்துக் கொண்டு விட்டார்களே மூன்று மாதத் தவணைக்குத்தானா காத்திருந்தார்கள் என்றால், அந்த வாதம்

சரியாகயிருந்தால் இந்த வாதம் பொருந்தாது. கன்னியாகுமரி விஷயம்பற்றி திரு. நேசமணி அவர்கள் சொன்னார்கள். அது அலாதியானது. பிரிவு விவாதம் வரும்போது அதுபற்றி சொல்ல லாம். **Travancore—Cochin proclamati n** பிரகாரம் கூட்டுப் பட்டா என்றெல்லாம் சொன்னார்கள். அதை அந்த சமயத்தில் பார்க்கலாம். மற்ற விஷயங்களையும், க்ளாஸ் பை க்ளாஸ் கன்ஸிட ரேஷன் வரும்போது அதற்கு தகுந்த பதில் கொடுக்கலாம் என்று நினைக்கிறேன். நிலச்சொந்தக்காரர்களுக்கும் திருப்தியில்லை. டெனென்ட்ஸ் சார்பில் உள்ளவர்களுக்கும் திருப்தியில்லை. சாப்பாடு போடுகிறார்கள். அந்தக் காலத்தில் பிராமணர்களுக்குத்தான் போடுவார்கள். நல்லபடி சாப்பாடு போடவேண்டுமென்று தித்திப்பு சகிதம் சாப்பாடு போடுவார்கள், அதோடு இரண்டணா தட்சணையும் கொடுப்பார்கள். ஒரு தித்திப்பு போட்டால் இரண்டு தித்திப்பு போடக் கூடாதா என்றும் இரண்டணாதானே நாலணா கொடுக்கக் கூடாதா என்றும் நினைப்பதுபோல்தான் இருக்கிறது. கால் ரூபாய் கொடுத்தால், ஏன் கால் ரூபாய் கொடுத்திருக்கிறார்கள், அரை ரூபாயாவது கொடுக்கக்கூடாதா என்பார்கள். இதற்கு நாம் என்ன செய்வது, நம்முடைய லட்சியம் என்ன, நம்முடைய கொள்கை என்ன என்பதைத்தான் நாம் முக்கியமாக பார்க்க வேண்டும். கொடுக்கின்ற சாப்பாட்டையும் சாப்பிட்டுவிட்டு, ஒரு ஸ்வீட் ஏன் போட்டிருக்கிறார்கள், இரண்டு ஸ்வீட் போடக்கூடாதா என்று கேட்டால் அதற்கு நாம் என்ன செய்வது? நிலம் இல்லா தவர்களுக்கு நிலம் கிடைக்கவேண்டும் என்பதுதான் நமது நோக்கம். அதற்காகத்தான் நான் ஒரு திட்டத்தைப் போட்டு கொண்டு வந்திருக்கிறேன். இதனால் என்ன பலன் ஏற்படும் என் பதை பின்னால்தான் பார்க்க முடியும். அவ்வளவுதான் இப்போது சொல்ல முடியும். அதல்லாமல் ஏதோ எனக்கு இருதயம் (heart) சரியாக இல்லை என்றெல்லாம் சொன்னார்கள். (ஹார்ட்) இருதயம் எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது. இதில் அனுகூலம் எவ்வளவு கிடைக்கும் என்பது என் கையில் இல்லை. சமுதாயத்தில் நல்ல அபிவிருத்தியை ஏற்படுத்த வேண்டும், எல்லாத் துறைகளிலும், இண்டஸ்ட்ரீஸ், அக்ரிகல்சர் செக்டார் போன்றவைகளில் டெவலப் மென்ட் ஏற்படவேண்டும் என்பதுதான் நம்முடைய நோக்கம். கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அதை ஏற்படுத்த முடியும். எல்லோருக்கும் ஒரேவிதத்தில் எந்த காரியத்திலும் திருப்தி ஏற்படாது. நல்லமுறையில் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்பதைத்தான் நாம் பொதுவாக பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, மற்ற விஷயங்களை எல்லாம் ஷரத்துவாரியாக விவாதம் நடைபெறும்போது பார்த்துக்கொள்ளலாம் என்று கூறி என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

1-00 p.m.

SRI M. KALYANASUNDARAM: ஸார், அமைச்சர் அவர்கள் இவ்வளவு நேரம் பேசியும் அங்கீகரிக்கக்கூடிய அளவில் எந்தக் கருத்தையும் தெரிவிக்கவில்லை. குப்பைக் கதைகளையும் கட்டுக்

கதைகளையும்தான் சொல்லுகிறார்கள். ஆளும் கட்சியிலிருந்தும் எதிர்கட்சியிலிருந்தும் தெரிவித்த எந்த திருத்தத்தையும் அங்கீகரிக்கக்கூடிய வகையில் அமைச்சர் அவர்கள் பேசவில்லை. முக்கியமான கருத்துக்களை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்கும்போது, பிராமணார்த்தம் பற்றி பேசுகிறார்கள். இந்த மசோதா நிறைவேறுவதினால் யாருக்கும் எந்த நிலமில்லாத மக்களுக்கும் நிலம் கிடைக்கப்போவதில்லை. இம்மாதிரிப்பட்ட ஒரு மசோதாவை பிரேரேபித்து, ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளக்கூடிய இந்த நேரத்தில், எதிர்கட்சியில் இருக்கின்ற நாங்கள், திராவிட முன்னேற்றக்கட்சி அங்கத்தினர்கள், தமிழ் தேசியக்கட்சி அங்கத்தினர்கள், மற்றும் சோஷியலிஸ்ட் கட்சி அங்கத்தினர்கள் என்று இருக்கக்கூடிய எதிர்கட்சி அங்கத்தினர்கள், இதில் கலந்து கொள்வது தகுதி அல்ல என்று தெரிவித்து இந்த சபையைவிட்டு வெளியேறுகிறோம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : I would request the hon. Members to hear me before they walk out. As Leader of the House, I am entitled to that much of respect.

இப்போது இந்த மசோதா ஆரம்பத்தில் இங்கு கொண்டு வந்து, பின்னால் செலக்ட் கமிட்டிக்குப் போய் பலதிருத்தங்களை செய்து இப்போது இங்கு வந்திருக்கிறது. மேலும் ஏதாவது திருத்தங்கள் செய்யவேண்டும் என்றால் "கிளாஸ் பை கிளாஸ்" விவாதம் வரும் போது, அதற்கான திருத்தங்கள் கொடுத்து அதை திருத்திக்கொள் வதற்கு அங்கத்தினர்களுக்கு பூரண உரிமை இருக்கிறது. இப் போது மசோதா நிறைவேறிவிடவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் அரசியல் நோக்கத்திற்காக வேண்டுமென்றால் சபையைவிட்டு வெளியேறலாம். திருத்தங்கள் கொண்டு வந்து விவாதிக்கும் போது, அதுபற்றி நிச்சயமாக கவனிக்கலாம் என்ற உறுதியை அங்கத்தினர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். அதல்லாமல் அரசியல் நோக்கத்திற்காகத்தான் வெளியேறுகிறோம் என்றால் அதில் எந்தவிதமான அர்த்தமும் இல்லை என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : அரசியல் நோக்கத்திற்காக அமைச்சர் அவர்கள் வேண்டுமானால் இதை பயன்படுத்திக்கொள் வார்கள் என்று நினைக்கிறேன். இந்த மசோதாவில் முக்கியமாக, ஒரு குடும்பத்திற்கு 30 ஏக்கர் என்று பொதுவாக சொல்லப்பட் டிருந்தாலும், நபர் ஒன்றுக்கு 30 ஏக்கர் வைத்துக்கொள்ளக்கூடிய வழி இருக்கிறது. இதை திருத்தவேண்டும் என்று வற்புறுத்திக் கூறினோம். அதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொள்ளவே இல்லை. இதற்கு திருத்தம் கொடுத்தாலும் என்னவாகும் என்பதும் எங்களுக்கு நன்றாகத் தெரியும். நாங்கள் வெளியேறுவதை கனம் அமைச்சர் அவர்கள் வேண்டுமானால் பிரச்சாரத்திற்கு வைத்துக் கொள்ளலாம். ஆனால் இந்த சபையில் இப்பேர்ப்பட்ட

ஒரு மசோதாவை ஆலோசனைக்கு எடுத்துக் கொள்வதற்குக்கூட தகுதியற்றது என்ற எங்கள் ஆட்சேபணையை தெரிவிப்பதற்காக நாங்கள் இந்த சபையிலிருந்து வெளியேறுகிறோம்.

(At this stage Sri M. Kalyanasundaram followed by the Members of his party walked out.)

THE HON. SRI C. SUBRAMANIAM : I want to know whether the hon. Members would not participate even in the clause by clause consideration. I would request them to make this position clear before they walk out.

**SRI K. ANBAZHAGAN :** சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள், நாங்கள் அரசியல் நோக்கத்திற்காகத்தான் வெளியேறுகிறோம் என்கிற கருத்தை தெரிவித்தார்கள். முக்கியமாக இந்த மசோதாவில் 30 ஏக்கர் என்று இருக்கிறது, அதைக் குறைத்துக்கொள்ளவேண்டும் என்கின்ற கருத்தை ஒப்புக் கொள்ளவேண்டும் என்று அங்கத்தினர்கள் பலர் கேட்டுக்கொண்டார்கள் . . .

DEPUTY SPEAKER : The hon. Member should not make a speech.

SRI K. ANBAZHAGAN : I am sorry, Sir. I want to explain the position.

DEPUTY SPEAKER : The Hon. the Minister for Revenue has replied to the points raised by the hon. Members.

SRI K. ANBAZHAGAN : Rose.

THE HON. SRI C. SUBRAMANIAM : I appealed to the hon. Members not to walk out. In spite of this and the assurance given by me, if they want to walk out, let them do so. There is no question of a further explanation or right of speech.

SRI K. ANBAZHAGAN : I do not want to speak again on this occasion but I want to make myself clear as to the ground on which we are walking out of the House.

அமைச்சர் அவர்கள் இதில் போதுமான அளவுக்கு உறுதி மொழி தராமல், மசோதாவில் உள்ளபடியே வைத்துக்கொள்வதற்கு அனுமதித்துத்தான் தீரவேண்டும் என்பதை வலியுறுத்துகின்ற காரணத்தால், எங்கள் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் யாவரும் இந்த சபையை விட்டு வெளியேறுகின்றோம்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** ஒவ்வொரு விதிகளையும் நிறைவேற்றும்போதும், சபையைவிட்டு வெளியேறிவிடப் போகின்றீர்களா என்பதைக் கேட்க விரும்புகிறேன்.

30th August 1961]

SRI K. ANBAZHAGAN : Not necessarily . . .

(At this stage Sri Anbazhagan and other Members of Dravida Munnetra Kazhagam walked out.)

**SRI T. KARIA GOUNDER :** திரும்பி வராமல் இருக்க வேண்டும் என்பதே எங்களுடைய கோரிக்கை.

DEPUTY SPEAKER : I will now put the motion to the vote of the House. The question is—

'That the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960 (L.A. Bill No. 8 of 1960) as amended by the Joint Select Committee be taken into consideration.'

The motion was put and carried.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again to-morrow at 8-30 a.m.

The House then adjourned.

## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE

*A. Statutory Rules and Orders*—Nil.

*B. Reports, notifications and other papers.*

191. *Notification issued with G.O. Ms. No.* 1734, *Home, dated* 23*rd May* 1961 *amending the Management of Special Homes and work Homes in the State of Madras (except the City of Madras) Rules,* 1960 *published with Home Department Notification S.R.O. No. A*-3036 *of* 1950, *dated the* 21*st April* 1960 *under section* 13 *of the Madras Prevention of Begging Act,* 1945 (*Madras Act XIII of* 1945).